# மிகப் பொருத்தமான ஜோடி

## இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும் சோப் மற்றும் பால்க்

துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு
இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும்
பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா!
புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில்
நீங்கள் இருப்பீர்கள்!

**கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்**







Interpub/CTS/I/80

# முதல்வர் பேட்டி

முதல்வராகப் பதவிப் பிரமாணம் ஏற்ற பிறகு ஒரு பத்திரிகையாளருக்கு திரு எம். ஜி. ஆர். அளித்த முதல் பேட்டி இது. பேட்டி கண்டவர் திரு கே. எஸ். ராமானுஜம். தேதி 10–6–80. கிட்டத்தட்ட நூறு நிமிடங்கள் பேசினார் முதல்வர். டேப்பில் பதிவான அதன் சுருக்கமே இங்கு இடம் பெறுகிறது. முதலில் ஒரு கேள்வியை ஆரம்பித்துக் கொடுத்த பின் முதல்வர் தாமாகவே தமிழகத்துக்கு முக்கியத்வம் வாய்ந்த பல விஷயங்கள் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். நாடு தழுவிய நோக்கிலும் பேசினார்.

கேள்வி: பொதுவாகத் தேசத்தின் சூழ்நிலையை நோக்குமிடத்து மக்கள் அரசியல் குறித்தும் அரசியல் தலைவர்கள் குறித்தும் நம்பிக்கை இழந்து விட்டார்கள்; விரக்தி ஏற்பட்டுவிட்டது என்றே கருதப்படுகிறது. ஆனால் நீங்கள் அண்ணா சிலை அருகே பதவிப் பிரமாணம் ஏற்றபின் பேசியபோது குழுமியிருந்த பெருந் திரளான மக்கள் மெய்யான உற்சாகத்துடனும் நம்பிக்கையுடனும் இருப்பது போலவும் தோன்றியது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

பதில்: ஒருவேளை மற்ற மாநிலங்களிலிருந்து தமிழகம் இந்த அம்சத்தில் மாறுபட்டிருக்கலாம். இங்கு எந்தக் கட்சி பதவிக்கு வரவேண்டும் யார் வரவேண்டும்என்று தேர்ந்தெடுக்க மக்களுக்கு மெய்யான வாய்ப்பிருந்தது. மற்ற மாநிலங்களில் நிலைமை இவ்வாறு இல்லை. ஜனதா கலைந்துவிட்ட பிறகு பலமான ஒரு மாற்றுக் கட்சிக்கு வோட்டளிக்கிற வாய்ப்பு வெகுவாகக் குறைந்து போயிற்று. எனவேதான் மற்ற மாநிலங்களில் உற்சாகக் குறைவும் தமிழகத்தில் அபரிமிதமான ஊக்கத்தையும் காண்கிறோம். வடக்கே வோட்டளித்துள்ளவர்களின் எண்ணிக்கையே மிகக் குறைவாக இருப்பதைப் பார்க்கலாம். தமிழகத்தில் நிலைமை அதைவிடத் தேவலாம். வோட்டளிப்பவர் எண்ணிக்கை குறையும் போது பெரும்பான்மை மக்களுக்குப் பிரதிநிதித்துவமே இல்லாமல் போகிறது. இந்நிலைமை கவலைக்குரியதே.

கேள்வி: நீங்கள் ஆட்சிக்கு வந்து என்ன சாதனைகளை நிகழ்த்த எண்ணியுள்ளீர்கள்? இதில் எதிர்பார்க்கிற பிரச்னைகள் என்னென்ன?

பதில்: தேர்தல் அறிக்கையில் எங்கள் திட்டங்களை விவரித்துள்ளோம். அவற்றை நிறைவேற்ற ஐந்து ஆண்டுகள் போதுமா என்பது வேறு பிரச்னை. ஆனால் முயற்சி வேண்டும். எதிர்ப்படக்கூடிய பிரச்னைகள் ஒன்றல்ல, இரண்டல்ல. ஏராளம். உதாரணமாக விலைவாசி குறைக்க வேண்டும் என்கிறோம். இதற்கு முழுப் பொறுப்பும் மத்திய அரசிடம்தான் இருக்கிறது. விலைவாசிகளில் மிக முக்கியமானது விவசாயப் பொருள்கள்— அரிசி. விவசாயத்தில் இடு பொருள்களின் விலை அதிகரிக்கிறது, மத்திய அரசின் உத்தரவால். இப்போது ரசாயன உரத்தின் விலை உயர்த்தியிருக்கிறார்கள். ஆக விவசாயிக்கு உற்பத்திச் செலவு அதிகமாகிறது. ஆனால் அதற்கேற்ப விவசாயி தான் உற்பத்தி செய்யும் பண்டத்தின் விலையை உயர்த்த முடியவில்லை. அங்கும் மத்திய அரசின் கட்டுப்பாடு இருக்கிறது. அரிசி விலை 95 ரூபாய்க்கு மேல்





''வாத்து குட்டி போடும்னு எழுதினேன்!
வாத்தியாரம்மா முட்டை போட்டுட்டாங்க!''

போகக் கூடாது என்கிறது மத்திய அரசு. மாநில அரசு உதவிப் பணம் (Subsidy) தரலாம் எனில் அதற்கும் மத்திய அரசின் தடை உத்தரவு வருகிறது. இதே நேரத்தில் கோதுமைக்கு வடக்கே விலையை உயர்த்தி நிர்ணயிக்கிறது மத்திய அரசு ரூ 150 என. இந்தக் கொள்கைகள் மாற வேண்டும்.

பொதுவாகப் பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்தால் விலை குறையும் என்பது பொருளாதாரக் கோட்பாடு. ஆனால் உற்பத்தியை அதிகரிக்கவும் வழியில்லாமல் இருக்கிற ஆலைகளுக்கும் இவ்வளவுதான் உற்பத்தி செய்யலாம் என்ற கட்டுப்பாடு உண்டு. உற்பத்தியை அதிகரிக்க அனுமதி பெற வேண்டும். புதிய ஆலைகள், தொழிலகங்கள் தொடங்க அனுமதி பெற வேண்டும். இவையெல்லாவற்றுக்கும் மத்திய அரசு அதிகாரங்களைத் தன் கையில் வைத்துக் கொண்டிருக்கிறது. கட்டுப்பாடுகள் காரணமாகவே பல இனங்களில் பற்றாக்குறை போன்ற மாயை உருவாகியுள்ளது.

உண்மையாகவே பதுக்கல், கள்ளச் சந்தை போன்றவற்றால் பற்றாக்குறை ஏற்படுமானால் அந்த இனங்களில் மக்களின் இயக்கம் ஆட்சியின் அதிகார பலம் இரண்டும் இணைந்து விலைவாசிகள் குறைய வழி வகுக்கலாம். இதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

தமிழக விவசாயிகள் குறிப்பாக, சிறு விவசாயிகள் கடன் தொல்லைகளால் ரொம்பவும் அவதிப்படுகிறார்கள். ஏற்கனவே கடன் சுமை அவர்களை அழுத்துகிறது. புதிய கடன் வாங்கினால்தான் உற்பத்தி செய்ய முடியும். ஆனால் பழைய 'கடனைத் தீர்த்தால்தான் சட்டப்படி புதிய கடன் அவர்களால் பெற முடியும். இதற்காக அவர்கள் தனியாரிடம் அதிக வட்டிக்குக் கடன் வாங்குகிறார்கள். அதிக வட்டி காரணமாய் இதையும் திருப்ப முடியாமல் அதையும் திருப்ப முடியாமல் அவதிப்படுகிறார்கள். பழைய கடனை ரத்து செய்துவிட்டால் புதிய கடனைப் பெற்று விவசாயம் செய்து கடனையும் திருப்பத் தரத் தயாராயுள்ளார்கள். ஆனால் கடன் ரத்து செய்ய மத்திய அரசு அனுமதி இல்லை.

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் விவசாயிகள் கமிஷன் ஒன்று ஏற்படுத்தப் போகிறோம். அதன் மூலம் மத்திய அரசுக்கு இங்குள்ள பிரச்னைகளை உணர்த்தப் போகிறோம்.

விவசாயிகள் என்னை ஒரு கேள்வி கேட்கிறார்கள். என்னால் பதில் சொல்ல முடியவில்லை. பேனா, துணிமணி போன்றவை உற்பத்தியாகின்றன. அவற்றுக்கு விலை நிர்ணயம் செய்பவர் யார்? அவற்றை உற்பத்தி செய்பவர்களே. ஆனால் விவசாயப் பொருளுக்கு மட்டும் உற்பத்தியாளன் விலை நிர்ணயம் செய்யாமல் அரசு நிர்ணயிப்பானேன்? என்கிறார்கள். மத்திய அரசுதான் பதில் சொல்ல வேண்டும்.

அரசு ஊழியர்கள் முதலானவர்களுக்கு விலைவாசி புள்ளி விவரங்களுக்கு ஏற்ப ஊதியம் உயர்கிறது. ஆனால் விவசாயச் செலவுகள் அதிகரிப்பதற்கு ஏற்பக் கொள்முதல் விலை உயர்வதில்லையே.

கேள்வி: பொதுவாகக் கிராமப் பொருளாதாரம் நகரப் பொருளாதாரம் பற்றித் தங்கள் கருத்து என்ன?

பதில்: ஜனதா அரசு கிராமப் பொருளாதாரத்தில் அக்கறை காட்டியது. 15 முதல் 20 லட்சம் பேர்வரை தமிழகத்தில் வேலை கொடுக்க முடிந்தது. வேலைக்கு உணவுத் திட்டத்தை அமல்படுத்தியதால் இது சாத்தியமாயிற்று. இது சாமானிய விஷயம் அல்ல. ஒரு நாளைக்கு அவர்கள் கூலியை அரிசியாகத் தருவதுடன் கையில் சிறிதளவு பணமும்கொடுப்போம். இதில் ஒரு வேடிக்கை: தாய்மார்கள் அதிகாரிகளிடம் வந்து' அரிசியை அவரிடம் கொடுங்கள்; பணத்தை என்னிடம் கொடுங்கள்' என்பார்களாம்! பணம் கணவனிடம் போனால் வீண் செலவாகிவிடுமோ என்று அவர்களுக்கு அச்சம்!

இத்திட்டத்தில் 28,000 பணிகள் நிறைவேற்றப்பட்டன. அந்த அளவில் கிராமப் புறங்கள் அபிவிருத்தி அடைந்தன.

காந்தியக் கிராமப் பொருளாதாரத்துக்கும், அண்ணாவின் கருத்துக்கும் அதிக வித்தியாசமில்லை. 'கிராமப் பொருளாதாரத்தில் பாதுகாப்பு ஏற்படுத்தப்பட்டால்தான் நகர்ப்புறப் பொருளாதாரத்துக்கு நல்லது. அப்படியின்றி நகர்ப்புறப் பொருளாதாரம் மட்டும் வளர்ந்தால் ஆபத்து. அதிலிருந்து சமுதாயத்தில் ஒரு புரட்சியே ஏற்படலாம்' என்றார் அண்ணா. காந்தியும் இதனை உணர்ந்திருந்தார்.

ஆனால் காந்தியக் கொள்கையை யதார்த்த நோக்குடன் அமல் படுத்த வேண்டும். பிரகாசம் அமைச்சரவை நடந்தபோது அவர் போலீஸ்காரர்களுக்குக் கூடக் கதர் உடைதான் தரப்பட வேண்டும் என்றார். இப்படி எல்லாமே கதர்தான், மில்களே வேண்டாம் என்பது சரியாகாது. ஆபத்தாகிவிடும். இதே நேரத்தில் கிராமப் பொருளாதாரத்தைப் புறக்கணித்தாலும் தீமையே விளையும். ஆக ஒரு கலப்புப் பொருளாதாரத்தை நாம் உருவாக்கவேண்டும். அதில் கிராம மக்களுக்கு உதவும் திட்டங்கள் இருக்க வேண்டும். நவீன தொழில்களுக்கும் ஊக்கம் தரவேண்டும்.

ஆனால் மத்திய அரசு கடைப்பிடிக்கும் இப்போதுள்ள பொருளாதாரக் கொள்கைகளின்படி ஏதோ ஒரு சிறிய தொழிலை எட்டுப் பேர் பத்துப் பேர் சேர்ந்து ஆரம்பிப்பதென்றாலும் முடியாது. ஒரு தொழிலகம் ஆரம்பிக்க

வேண்டுமானால் அது குறைந்தபட்சம் இந்த அளவுடையதாக இருக்க வேண்டும் என்று பல இனங்களில் கட்டுப்பாடுகள். ஆக அந்த இனங்களில் தொழிலகங்களை ரொம்ப வசதி படைத்தவர்கள்தாம் ஆரம்பிக்க முடியும். அதாவது ஏற்கனவே பணக்காரர்களாயிருப்பவர்கள் மேலும் பணக்காரர்களாக உதவுகிற கட்டுப்பாடுகள். மாநிலங்களின் தேவைகளை அனுசரித்து மாநில அரசுகள் தொழில்களின் தன்மையை, அளவினை நிர்ணயிக்கும் உரிமைகூடப் பெறாமல் இருக்கின்றன. இதுபோன்றவற்றை யெல்லாம் மத்திய அரசிடம் பேசி மாற்றியாக வேண்டும்.

கேள்வி: தொழிலாளர் பிரச்னைகள் பற்றி உங்கள் எண்ணங்கள் என்ன?

பதில்: முதலாளி தொழிலாளி பிரச்னை ஒருபுறம் இருக்கட்டும். சில சமயம் தொழிலாளரே தொழிலாளருக்கு எதிராக நடக்கும் நிலைமை தோன்றுகிறதே அதுதான் எனக்கு ரொம்ப வேதனை அளிக்கிறது.

உதாரணமாக, குறிப்பிட்ட மாதத்தில் அறுவடை செய்து கரும்பு சர்க்கரை ஆலைக்கு வரும் என்பது அனைவருக்கும் தெரியும். அந்தச் சமயம் பார்த்து ஆலை ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்கிறார்கள்; தங்கள் கோரிக்கையை வலியுறுத்த. பார்க்கப் போனால் விவசாயிகள் எண்ணிக்கை அதிகம், ஆலை ஊழியர்களைவிட. ஆயினும் என்ன? ஆலை ஊழியர்கள் வேலைநிறுத்தத்தால் இந்த விவசாயிகள் உற்பத்தி செய்த கரும்பு அத்தனையும் சத்து இழந்து பாழாகிறது. தேசத்துக்கே நஷ்டம்; விவசாயிகளுக்கு மட்டுமல்ல. தொழிலாளர் தலைவர்கள் — அவர்கள் எந்தக் கட்சியினராயினும் சரி, இதையெல்லாம் கவனிக்க வேண்டும். ஒருசில ஆலைத் தொழிலாளர் நலம் பெற எண்ணி எத்தனையோ பல விவசாயத் தொழிலாளர்களுக்குத் தீமை செய்யலாமா?

கிராமத்திலிருந்து பலபேர் நகரத்துக்கு வந்துகொண்டேயிருக்கிறார்கள். இதனால் நகரப் பொருளாதாரம் பாதிக்கப்படும். இது நிற்க வேண்டுமானால் கிராமத்திலேயே அவர்களுக்கு வாழ்க்கை வசதிகள் செய்து தர வேண்டும். கல்வி, வேலை வாய்ப்பு, உணவு, உடை, சினிமா, பஸ் போக்குவரத்து போன்ற வசதிகளை அவர்கள் பெற்றால் நகருக்கு ஏன் வரப்போகிறார்கள்?

கேள்வி: இதற்கெனத் திட்டம் ஏதாவது வைத்திருக்கிறீர்களா?

பதில்: அமல்படுத்தியே இருக்கிறோம். விளம்பரம் இன்றி நடந்த காரியம் ஒன்றைச் சொல்கிறேன். 374 பஞ்சாயத்து யூனியன்கள் உள்ளன. இவற்றில் 70 யூனியன்களைத் தேர்ந்தெடுத்து 79—80ல் இந்த வட்டாரங்களில் முதலில் பாதுகாக்கப்பட்ட குடிநீருக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அடுத்து போக்குவரத்து வசதி, வேலை வாய்ப்பு, மூலப் பொருள்கள் ஆராய்ச்சி, தொழில் வள வாய்ப்பு, கல்வி, மருத்துவம், நீர்ப்பாசனம் முதலியவற்றில் தீவிரமாகச் செயல்பட வேண்டும் என்று அதிகாரிகளுக்குச் சொன்னேன். அதிகாரிகளைக் காரியம் செய்யச் சொன்னால் அதை நிறைவேற்றுவதில் ஏற்படக் கூடிய கால தாமதங்களுக்குச் சிவப்பு நாடா என்பார்கள். அது குறுக்கிடக் கூடாது என்பதற்காக விசேஷ அதிகாரங்களை வழங்கினேன். இலாக்கா இலாக்காவாக பைல்கள் சுற்றி வந்து கொண்டிருக்காமல் காரியம் நிறைவேற வசதி செய்து தந்தேன். இது வரை யாரும் பரீட்சித்துப் பாராத காரியத்தைத் துணிச்சலுடன் மேற்கொண்டேன். மறுபடி ஆட்சிப் பொறுப்பு ஏற்றிருப்பதால் இனி இந்தப் பணியைத் தொடர வேண்டும்.

நல்ல திறமை மிக்க அதிகாரிகள் நம்மிடம் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் ஒரே மாதிரி 'ரொட்டீ'னில் உழன்று துரு ஏறிப் போயிருக்கிறார்கள். அதிகாரிகள் தைரியமாகச் செயல்பட வேண்டும். பொறுப்பு ஏற்க முன்வர வேண்டும். சாதனைகளை நிறைவேற்றிக் காட்ட வேண்டும்.

(அடுத்த இதழில் முடியும்)

---

**ப**டத்தின் டைரக்டர் அவ்வப்பொழுது ஒரு நாயைக் காட்டி அதன் வாலை நிமிர்த்த ஒருவன் முயற்சி செய்வதையும் காட்டுகிறார். நிமிராத வால் பட உலகம்தான் என்று படம் நிரூபிக்கிறது.

கதை, திரைக் கதை, வசனம், யாவும் பாக்கியராஜ்தான். கதாநாயகனும் அவரே. மிக, மிக, மிகப் பழைய இரண்டு பெண்டாட்டிக்காரனின் திண்டாட்டம்தான் கதை! ருக்குவைக் காதலித்து ரகசியமாகக் கோவிலில் தாலி கட்டிய பிறகு நந்தகோபால் தன் முறைப் பெண் பாமாவுக்கும் தாலி கட்டுகிறான். பிறகு இருவருக்கும் நியாயம் வழங்க முற்படுகிறான். அதன் காரணமாக இரு மனைவியரிடமும் அடிபட்டு, இடிபட்டுத் தவிக்கிறான்.

இறந்துவிட்டது போல் நடித்து இரு மனைவியரையும் ஒன்று சேர்த்து வைக்க முயல்கிறான். இருவரும் ஒற்றுமையாகி ஒன்று சேரும் தருணத்தில் கதாநாயகன் பிழைத்தெழுந்து விடுகிறான். இருவரும் மீண்டும் சண்டையைத் தொடங்கி விடுகின்றனர்.

''பாமா ருக்மிணி'' திரைக்கேற்ற கதை இல்லாத பஞ்சத்தை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

— காந்தன்



# Kalki Shopping Page

ஸீலீங் ஃபேன்களில்
சிறந்தது
நான்கு வித குளிர்ச்சி மிகு
வண்ணங்களில் கிடைக்கும்
ஒரே ஃபேன்

வெஸ்டெர்லி

அதிகபட்ச காற்றை அளிக்கவல்லது. தனித்தன்மை வாய்ந்த சோக் ரெகுலேட்டர் 30% வரை மின்சாரச் செலவை மிச்சப் படுத்துகிறது. கவர்ச்சிமிகு வடிவமைப்புடன் நியாயமான விலையில் கிடைக்கிறது.

கவர்ச்சிக்கும் சிக்கனத்திற்கும்
வெஸ்டெர்லி

national 749



பார்த்தாஸ்
டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

பார்த்தாஸ்
நாகர்கோவில்

கோட்டையம், எர்ணாகுளம்,
சங்கனாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் & K.L.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar

HMV
**fiesta**
*popular*







India's
largest selling
record player.

Max. rec. retail price
Rs 514/-
including excise duty
Local taxes extra

## HMV STEREO POPULAR II



Rs. 1,068/-
Max. Rec. Ret.
Price incl.
Excise Duty.
Taxes extra.




HMV STEREO SYSTEMS

*Available at*

**ARUNA & CO**
479, T. H. Road,
Madras-600 021
Ph: 553644 — 552728

**VIVEK & CO**
205, Purasawalkam
High Road, Madras-600 007
Ph: 663545

**SHANTHI ELECTRONICS**
821, Mount Road,
Madras-600 002 Ph: 81594

எல்லா
வயதினருக்கும்
எல்லா
தேவைகளுக்கும்
கைத்தறி!

கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

குறளகம்
முதல் மாடி
சென்னை - 600 001
அருகில் உள்ள
விற்பனை நில்லயங்களுக்கு
வருகை தாரீர்!

---

ஆண்களுக்கு
தையற்கலை
வகுப்புகள்

அனுபவஸ்தர்கள் மூலம் 2 மாத/3 மாத பகுதிநேர/முழுநேர வகுப்புகளில் பயிற்சி சுலபமாக பெறுவதற்கு ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. வெளியூர் உள்ளவர்களுக்கு வசதி செய்யப்படும். செய்முறை வகுப்புகள் தமிழ், தெலுங்கு, ஆங்கில, மலையாள மொழிகளில் பயிற்சி அளிக்கப்படுகிறது. முற்றிலும் புதிய நவீன முறையில் நடத்தப்படும் ஒரே ஸ்தாபனம்.

அஞ்சல்வழியும் (அ) விபரப்புத்தகம் பெற ரூ. 2.00 M.O. செய்க.

வனஜ் தையற் பள்ளி
32 காந்தி இர்வின் சாலை, எழும்பூர், சென்னை 8
[டென்னிஸ் ஸ்டேடியம் அருகில்]
எந்த தேதியிலும் சேர்ந்து கொள்ளலாம்.

---

# Bharat TV NOW COMES TO YOU WITH SOLID STATE TECHNOLOGY



**20" Urvashi Solid State**
(Shutter Type)

- Laminated sliding shutters
- 3 ICs single printed circuit board
- Automatic picture control
- Multichannel tuner
- 20 cm dual cone double speaker



**20" Solid State BT 202**
(without shutters)

- 20 cm 'Hi-fi' dual cone speaker
- Acoustically designed cabinet
- 3 ICs
- Multichannel tuner
- Automatic picture control

**M/s HAPPY HOUSE**
574, Mount Road,
Madras-600 006
Ph: 445345

**M/s ARUNA & CO**
340, Tiruvottiyur High Road,
Madras-600 019
Ph: 553644 — 552728

**M/s VISION CENTRE**
109-A, Karuneegar Street,
Adambakkam, Madras-600 088

# கல்கி-சாரதாஸ் பட்டுப்புடவை பரிசுத்திட்டம்

## போட்டி முடிவுகள்

**முதல் பரிசு: ரூ. 750 பெறுமானமுள்ள பட்டுப் புடவை**

எட்டு விடைகளையும் சரியானபடி எழுதி, பரிசு பெறும் ஒரே அதிர்ஷ்டசாலி:

பத்மினி கணேஷ்
24-ஏ, கம்பர் தெரு
எஸ். எஸ். காலனி
மதுரை-625 016.

**இரண்டாம் பரிசு பட்டுப் புடவை:**

ஏழு விடைகளைச் சரியானபடி பலர் எழுதியிருந்தபோதிலும் விளம்பர வாசகத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்:

கீதா சாந்தாராம்,
10-1, டெம்பிள் ரோடு,
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003.

இவர் எழுதிய விளம்பர வாசகங்கள்:

மொட்டிலே சிறந்தது மல்லிகை மொட்டு
பொட்டிலே சிறந்தது குங்குமப் பொட்டு
பாட்டிலே சிறந்தது செந்தமிழ்ப் பாட்டு
பட்டிலே சிறந்ததோ சாரதாஸ் பட்டு!

● ● ●

கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு—கல்கி
படிப்போர்க்குக் காணுமிடமெல்லாம் களிப்பு



பத்மினி கணேஷ்

**மூன்றாம் பரிசு - பட்டுப் புடவை**

ஆறு விடைகளைச் சரியானபடி பலர் எழுதியிருந்த போதிலும் விளம்பர வாசகத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்:

ஆர். வசந்தி,
மே. பா: கே. ஆர். ராஜகோபால்
குளுமணி போஸ்டு,
திருச்சி மாவட்டம் 639 103,

இவர் எழுதிய விளம்பர வாசகங்கள்:

காளையர் மயங்குவது கன்னியர் கட்டழகில்
கன்னியர் மயங்குவது சாரதா'ஸ் பட்டழகில்

● ● ●

தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை
கல்கியிற் சிறந்ததொரு சஞ்சிகையில்லை

எட்டுக் கேள்விகளுக்கும் சரியான விடைகள்: (1) நிதானம் (2) அடுப்பு (3) பசி (4) சோப்பு (5) உழைப்பு (6) கைப்பை (7) சிக்கனம் (8) கண்ணீர்.

**ஆறுதல் பரிசுகள்:**

ஆறுதல் பரிசுக்குரிய 200 பேர்கள் அதிர்ஷ்டக் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு அவர்களுக்கு மே முதல் வாரம் தொடங்கிக் கல்கி அனுப்பப்பட்டு வருகிறது. ஜூலை இறுதிவரை அனுப்பப்படும்.

---

# ராஜாஜியின் பக்தர்; சிவாஜியின் நிழல்



சின்ன அண்ணாமலை

● திரு சிவாஜி கணேசன், நாத்தழுதழுக்க, அடிக்கடி பேச்சு தடைப்பட, கண்கள் கலங்க கூறியது:

"எனது பன்னிரண்டாவது வயதிலிருந்தே சின்னாணுவை எனக்குத் தெரியும். ஆம். நான் சின்ன அண்ணாமலையை அப்படித்தான் கூப்பிடுவேன். கடந்த கால் நூற்றாண்டுக்கு மேலாக என்னுடைய நிழலாகவே இருந்தார். முதலில் அவர் ஒரு தேசியவாதி. பிறகுதான் அவர் ஒரு திரைப்படத் தயாரிப்பாளர். தொழில் என்று ஏதாவது செய்ய வேண்டுமே என்பதற்காகத்தான் அவர் இந்தத் திரைப்படத் தொழிலை ஏற்றார். அதே நேரத்தில் அதற்குக் கடுமையான உழைப்பை நல்கி அக்கறையுடன் செயலாற்றினர்.

"பெருந்தலைவர் காமராஜிடமும், ராஜாஜியிடமும் அதிக மதிப்புள்ளவர். மூதறிஞர் ராஜாஜியைப் பற்றி அதிகம் பேசி மக்களிடையே ஒரு பெரும் விழிப்பை ஏற்படுத்தியவர். கல்கி அவர்கள் மூலமாக அவருக்கு டி. கே. சி. ராஜாஜியிடம் தொடர்பு ஏற்பட்டது. ராஜாஜியிடம் பக்தி கொண்ட அவர் ராஜாஜியைப் புரிந்து கொள்ளாதவர்களுக்குப் புரிந்து கொள்ளுமளவுக்கு எடுத்துக் கூறி அவரைப் பின்பற்ற வைப்பார். இதற்காக மணிக்கணக்கில் வாதாட அவர் தயார்!

"படித்துக் கொண்டிருந்த போதே தேச விடுதலைக்காகச் சிறை சென்ற வீரரில் இவரும் ஒருவர். சிரிக்கச் சிரிக்கப் பேசுவார். அதனூடே சிந்திக்கவும் வைப்பார்.

"சிதறிக் கிடந்த என் ரசிக மன்றங்களை எல்லாம் ஒன்று கூட்டி ஓரமைப்பாக்கியவர். அங்கத்தினர்கள் எல்லாருக்கும் தேசிய உணர்வை ஊட்டியவர்.

"நீண்ட காலமாக என் அத்யந்த நண்பராக இருந்தவர், என்னைவிட ஏழெட்டு வயது தான் மூத்தவர், சற்றும் எதிர்பாராத சமயத்தில் எதிர்பாராத விதத்தில் என்னை விட்டுப் பிரிந்து விட்டார். அவர் மறைந்து விட்டார் என்பதை இப்போது கூட நம்ப மறுக்கிறது மனம். அவர் உடனிருப்பதாகவே எண்ணிக் கொண்டுதான் கடமைகளைத் தொடரப் போகிறேன்.

பேட்டி: 'சலன்'

# 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



## 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை

இரும்புச்சத்து அதிகமுள்ள

# ஃபாரெக்ஸ்

கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றுக் குறையினல் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப்படுகிறது.

டாக்டர் சுபாஷ் C. ஆர்யா, "இன்ஃபான்ட் அண்டு சைல்டுகேர் ஃபார் தி இந்தியன் மதர்".

**டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது ஃபாரெக்ஸ்—குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப் பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும், உடல் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும், முன்னேற்றத் திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது —ஃபாரெக்ஸ்




**இலவசம்!**

குழந்தையின் முதலாண்டுப் புத்தகத்திற்கு. 50 பைசா தபால் தலையுடன் எழுதுங்கள். குழந்தைப் பராமரிப்பு பற்றியது இது—புதிய தாய்மார்களுக்கு ஒரு சிறு விளக்கப் புத்தகம்.

த. பெ. எண் 19119,
(FAR 202 I)
பம்பாய் 400 025.

## டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்
## குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு

CASGLF-13-303 Tam


ரயில்வே பட்ஜெட்
மக்கள்
பொது பட்ஜெட்
மக்கள்


ஆட்சி பீடம்
தேர்தல் வாக்குறுதிகள்
அரசை விமர்சிக்கும் வாய்ப்பு
எதிர்க் கட்சித் தலைவர் பதவி


சட்டமன்ற காங்கிரஸ் (இ) தலைவர் தேர்தல்
தப்பிச்சேன், பொழைச்சேன்! ..நல்லவேளை அஸ்ஸாமுக்கு அனுப்பாம, தமிழ் நாட்டுக்கு அனுப்பிச்சதோட விட்டாங்களே!

1980 ஜூன் 29
ரௌத்திரி ஆனி 15
மலர்: 38 இதழ்: 48



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வாழ்க ஆர். வி.; வெல்க பாரதம்!

பட்ஜெட் என்பது வரவு செலவுகளைச் சரிக்கட்டிக் கொண்டு போகிற கணக்கு விவகாரம் மட்டுமல்ல; தேசத்தின் பொருளாதாரத்தையும் தொழில் வளத்தையும் அபிவிருத்தி செய்யும் முயற்சியாகவும் அது விளங்க வேண்டும்.

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு இன்று இந்த உண்மை உணரப்பட்டிருக்கிறது. உணர்ந்து செயலாற்றியிருப்பவர் ஆர். வி. அவரை வாழ்த்துவதுடன், சிரமமான ஒரு காரியத்தைச் செய்யத் தகுதியான ஒரு நபரைத் தேர்ந்தெடுத்து அவரைச் சுதந்திரமாகவும் இயங்க விட்ட பிரதமரையும் வாழ்த்துகிறோம்.

பட்ஜெட் என்றாலே மேன்மேலும் வரிச்சுமைகள்; மேன்மேலும் மக்களுக்குக் கஷ்டங்கள் என்ற நிலையைத் துணிந்து தைரியமாக மாற்றியுள்ளார் ஆர்.வி.

ஓரளவுக்குமேல் வரிகள் அதிகரிக்கும் போது மக்களுக்கும் சரி, தொழிலதிபர்களுக்கும் சரி மனச் சோர்வு ஏற்படுகிறது. உழைத்து, உற்பத்தியை அதிகரித்து என்னத்தைக் கண்டோம் என்று தொழிலாளரும் புதுத் தொழில்கள் ஆரம்பித்து வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி என்ன பிரயோஜனம் என்று தொழிலதிபர்களும் விரக்தி அடைகிறார்கள். அந்த நிலை இந்த பட்ஜெட்டால் நீங்கியுள்ளது. மக்களும் தொழிலதிபர்களும் புதுத்தெம்பும் உற்சாகமும் பெற்றுள்ளனர். ரயில்வே பட்ஜெட் அளித்த மிகப் பெரிய ஏமாற்றத்தைக் கூடத் துடைத்தெறிந்து விடுகிற அளவில் பொது பட்ஜெட் நம்பிக்கை அளிப்பதாக உள்ளது.

ஆர். வியின் சாமர்த்தியத்தைப் பாருங்கள்; கஸ்டம்ஸ், எக்ஸைஸ் வரிகளில் 42·68 கோடிதான் சலுகை அளித்திருக்கிறார். ஆனால் மொத்தத்தில் புதிதாக 282 கோடி வரி வசூலுக்கு வழி வகுத்திருக்கிறார். ஆயினும் இது பாரமாகத் தெரியாமல் இருப்பதற்குக் காரணம் புதிய வரிகள் சாமானியனை அதிகம் பாதிக்காத இனங்களில் விதிக்கப் பட்டுள்ளன என்பதுடன் காண்பிக்கப்பட்டுள்ள சலுகைகள் சாமானியனுக்கு உதவுகிற இனங்களில் இருப்பது தான்.

அதே நேரத்தில் 1417 கோடி பட்ஜெட்டில் துண்டு விழுகிறது என்பதையும் கவனிக்க வேண்டும். பட்ஜெட்டில் துண்டு விழுகிறது என்றால் அதை நோட்டு அச்சடித்துத்தான் ஈடு கட்டவேண்டும். அதனால் பணவீக்கம் அதிகரித்து விலைவாசி உயரும். ஆனால் இப்படி நேராமல் இருக்கவும் ஒரு வழி உண்டு. அதாவது வரிச்சலுகைகள் காரணமாக உற்பத்தி அதிகரிக்கும், அதிக உற்பத்தி காரணமாக வரி வசூலும் அதிகரிக்கும். தவிர, வருமான வரி போன்ற நேர்முக வரிகளில் காண்பிக்கப் பட்டுள்ள சலுகைகள் காரணமாக மக்கள் நேர்மையாக வரி செலுத்துவார்கள். இதன் மூலமும் அரசுக்கு வருவாய் கூடும். இவையெல்லாம் பட்ஜெட்டில் துண்டு விழும் தொகை பெருமளவு குறைய வழி வகுக்கும் என்று நம்புகிறார் ஆர். வி.

அரசுத்துறை தொழிலகங்கள் பட்ஜெட்டில் அரசின் உதவியையே சதா எதிர்பாராமல் மற்ற தனியார் துறை நிறுவனங்கள் போல் பொது மக்களிடமிருந்து கடன் பெறலாம் என்ற ஏற்பாட்டினை ஆர்.வி. செய்திருப்பது அவரது மற்றொரு சாணக்கியம். நிறுவனத்தினிடம் நம்பிக்கை இருந்தாலொழிய மக்கள் சுலபத்தில் கடன் தரமாட்டார்கள். மக்களின் நம்பிக்கையைப் பெற நிறுவனம் திறம்பட இயங்கியாக வேண்டும். அரசுத்துறை நிறுவனங்கள் மெத்தனத்தை உதறிச் சுறுசுறுப்படைந்து லாபகரமாக இயங்கவேண்டும் என அமைச்சர் சுட்டிக் காட்டுவது போலாகிறது இந்த ஏற்பாடு.

குடும்பக்கட்டுப்பாடு, புதிய அனல் மின் நிலையங்களின் அமைப்பு வேலைகள், பெட்ரோலியம் எண்ணெய் வள ஆராய்ச்சி, அதிக நிலக்கரி உற்பத்தி

ஆகியவற்றுக்கு ஆர்.வியின் பட்ஜெட் அளிக்கும் முக்கியத்துவம் வரவேற்புக்குரியது.

கடன் தரும் நிறுவனங்கள் பெறும் வட்டி மீது ஏழு சதவிதம் வரி விதித்துள்ளார் அமைச்சர். இதனால் வட்டி விகிதமே உயர்ந்து விடுமோ என்ற கவலை தொழில் – வர்த்தக வட்டாரங்களில் நிலவுகிறது. இருப்பினும் வேறு பல சலுகைகளுடன் ஒப்பிடும்போது இந்தப் புதிய வரி பெரிய விஷயமல்ல.

ஆர். வியின் பட்ஜெட் மக்களின் சேமிப்புக்கு ஊக்கமளிக்கிறது; மத்திய தர வகுப்பினரிடம் அனுதாபம் காட்டுகிறது; சிறிய பெரிய தொழிலதிபர்கள் புதிய தொழில்கள் தொடங்க ஊக்கமளிக்கிறது.

அடுத்த பட்ஜெட் இதைவிடவும் தாராள மனத்துடன் உருவாக வேண்டுமானால் அது இந்த பட்ஜெட் அடையும் வெற்றியின் அடிப்படையிலேயே சாத்தியமாக முடியும். எனவே இனி சால்ஜாப்புகள் கூறிக் கொண்டிருக்க இடமில்லை என உணர்வோம். அரசுத்துறையிலும் சரி, தனியார் துறையிலும் சரி உற்பத்திக்கு உதவாத செலவினங்களைக் கட்டுப்படுத்துவோம். உழைப்பார்வத்தை அதிகரித்துக் கொள்வோம். பாரதம் வெற்றி காணப் பாடுபடுவோம்.

---

# ஜூன் 13, 14ல் நடந்தது என்ன?

"**பா**ங்குகளில் என்ன நடக்கிறது?" என்ற கட்டுரை பிரசுரமானதில் பல பாங்கு ஊழியர்கள் வருத்தமடைந்துள்ளனர். தங்கள் ஆட்சேபங்களை எழுதி அனுப்பியும் உள்ளனர். திரு கிருஷ்ணன் எழுதிய மேற்படி கட்டுரையைப் பாராட்டியும், அதில் குறிப்பிட்டுள்ளதை விட மோசமான சூழல் நிலவுவதாகவும் சிலர் எழுதினார்கள். இக்கடிதங்கள் சில 15–6–80 இதழிலும் இந்த இதழிலும் பிரசுரமாகியுள்ளன. இவர்கள் அனைவருமே பாங்குகளில் வேலை பார்க்கிற பொறுப்புள்ள நபர்கள்தாம் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

கல்கியில் வெளியான கிருஷ்ணனின் கட்டுரை எல்லா பாங்கு ஊழியர்களுமே மோசம் என்று சொல்லவில்லை. பொறுப்பு மிக்க, அறிவாளிகளான பலர் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் பொதுவாக ஊழியர்கள் நடந்துகொள்ளும் முறையும் அரசுடைமையான பாங்குகளின் கொள்கைகள் பலவும் வாடிக்கையாளருக்கு உதவுவதாக இல்லை என்பதைச் சொல்லியே ஆகவேண்டும். ஊழியர்களின் நடத்தையைப் பொருத்தமட்டில் ஓர் உதாரணம் பார்ப்போம். சென்னையில் சென்ற வெள்ளிக்கிழமையும் சனிக்கிழமையும் - 13, 14 ஜூன் ரிசர்வ் பாங்கில் கிளியரிங் ஹவுஸ் வேலை செய்யவில்லை. (இந்த விவரம் பத்திரிகைகளில் கூட வெளியாகவில்லை.)

கிளியரிங் ஹவுஸ் என்றால் என்ன? அது ஏன் இரு தினங்கள் வேலை செய்யவில்லை? அப்படி வேலை செய்யாததால் யாருக்கு என்ன நஷ்டம்?

ஒரு பாங்கில் கணக்கு வைத்திருப்பவர் 'செக்' எழுதிக் கொடுக்கிறார். அது வேறு ஒரு பாங்கில் தொகை பெறுகிறவரால் தமது கணக்கில் கட்டப்படுகிறது. ஆக, ஒரு பாங்கில் ஒருவர் வைத்திருக்கும் பணம் இன்னொரு பாங்கில் வேறு ஒருவர் கணக்குக்கு இடம் மாற வேண்டும். இப்படிப் பல்லாயிரக் கணக்கான செக்குகள் ஒவ்வொரு தினமும் கணக்கு மாறவேண்டும். சென்னையில் ஒரு நாளைக்கு இப்படிக் கணக்கு மாறும் தொகை ரூ. 50 கோடி. இந்தக் கணக்கை நேராக்கும் இடம்தான் ரிசர்வ் பாங்கின் கிளியரிங் ஹவுஸ். கிளியரிங் ஹவுஸுக்கு ஒவ்வொரு பாங்கும் தனது பிரதிநிதியை ஒவ்வொரு தினமும் அனுப்புகிறது. இந்த ஊழியர்கள் தங்களுக்கு ஏர் கண்டிஷன் வசதி இல்லையாதலால் வேலை பார்ப்பது கஷ்டமாயிருக்கிறது என்பது போன்ற சில கோரிக்கைகளை எழுப்பினர். "இக்கோரிக்கைகள் உடனடியாக நிறைவேற்றக் கூடியவை அல்ல; கவனித்து ஆவன செய்கிறோம்" என்று ரிசர்வ் பாங்க் கூறியது.

இதற்கிடையில் கிளியரிங் ஹவுஸுக்கு வரும் ஊழியர்கள் கணக்கு நேராகு முன்பே வெளியேறுவது போன்ற காரியங்களில் இறங்கினார்கள். ரிசர்வ் பாங்க் இதையொட்டி, பல்வேறு பாங்க் நிர்வாகிகளுக்கும் ஒரு சுற்றறிக்கை அனுப்பியது. கிளியரிங் ஹவுஸுக்கு வரும் ஊழியர்கள் பொறுப்புணர்ந்து நடந்து கொள்ளுமாறு அந்தந்த பாங்கு நிர்வாகங்கள் வற்புறுத்த வேண்டும் என்று அந்தச் சுற்றறிக்கை கூறியது.

இப்படி ரிசர்வ் பாங்க் சுற்றறிக்கை அனுப்பியது கிளியரிங் ஹவுஸுக்குச் செல்லும் ஊழியர்களுக்குப் பொறுக்கவில்லை! அவமானமாகிவிட்டதாம்! அந்தச் சுற்றறிக்கையை ரிசர்வ் பாங்க் வாபஸ் பெற வேண்டும் என்று கோரியுள்ளனர். கிளியரிங் ஹவுஸுக்கு வரும் பாங்கு ஊழியர்களின் பொறுப்பின்மை காரணமாக ஜூன் 13, 14 தேதிகளில் ரிசர்வ் பாங்கி கிளியரிங்ஹவுஸ் வேலைகளை நிறுத்தி வைத்துவிட்டது. இரண்டு நாள் கிளியரிங் ஹவுஸ் வேலை செய்யவில்லையெனில் 100 கோடி ரூபாய் பரிவர்த்தனை தடைபட்டுப் போகிறது.

எத்தனை எத்தனை பாங்கு வாடிக்கையாளருக்கு இதனால் கஷ்ட நஷ்டங்கள் உண்டாகும்? பாங்கு ஊழியர்களுக்கும் நிர்வாகத்துக்கும் இடையில் உள்ள தகராறுகளுக்காக, கருத்து வேறுபாடுகளுக்காக, வாடிக்கையாளர்கள் ஏன் பலியாக்கப்பட வேண்டும்? தேசத்தின் பொருளாதார வளர்ச்சி ஏன் அந்த அளவில் தடைப்பட வேண்டும்?

குண்டுராவ் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டுவிட்டுப் போய்விட்டார். ஹாஜா ஷெரீப்தான் தமிழக இந்திரா காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களின் தலைவர் என்று அறிவித்துவிட்டு விமானத்தில் ஏறி டில்லி சென்று பறந்துவிட்டார். இங்கே ஆர்ப்பாட்டங்கள் நடந்தன, நாற்காலி மேஜைகள் உடைந்தன

'தமிழக சட்டமன்ற இ. காங்கிரஸ் உறுப்பினர்கள் 30 பேர் தங்களுக்குள் ஒரு தலைவரை ஜனநாயக ரீதியில் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாத அளவில் அத்தனை அப்பாவிகளா? இதற்குக் கர்நாடக முதல்வர் குண்டுராவ் விஜயம் செய்ய வேண்டுமா? அவர் ஹாஜா ஷெரீப் பெயரை அறிவித்ததும் இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ.க்களே அது கேட்டு வியப்படைய வேண்டுமா?' என்றால், இப்படியெல்லாம் நடக்காதிருந்தால் தான் அதிசயம். ஏனெனில் கட்சிக்குள் ஜனநாயகம் என்பது நமது தேசத்தில் அனுசரிக்கப்படுவதே யில்லை. எல்லாம் மேலிடத்து ஆணைகள்தாம். அல்லது மேலிடத்துத் தூதர் செய்திட்ட முடிவுதான்.

இதற்கு மாறாக அமெரிக்காவைப் பாருங்கள். கார்ட்டர், கென்னடி இருவருமே ஒரே கட்சிதான். ஆயினும் வருகிற ஜனாதிபதி தேர்தலுக்கு நிற்க இவர்களில் யாரை நியமிப்பது என்று கட்சித் தொண்டர்களிடையே இன்று நாடு தழுவிய நோக்கில் வாக்கெடுப்பு நடந்து வருகிறது. இதேபோல் மாற்றுக் கட்சியிலும் போட்டி உண்டு. வாக்குப் பதிவு உண்டு. தேசத்தில் ஜனநாயகம் இயங்குவது எவ்வளவு முக்கியமோ அந்த அளவுக்குக் கட்சிக்குள் ஜனநாயகமும் முக்கியம் என்று உணர்ந்திருக்கிறார்கள்.


எச். எம். பட்டேல்


ஹாஜா ஷெரீப்

இங்கே ஒரு கட்சியைச் சேர்ந்த சட்டமன்ற உறுப்பினர்கள் முப்பது பேர் தங்களுக்குள் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதியில்லை!

● ● ●

ஜனதா ஆட்சியிலிருந்த காலகட்டத்தில் விலைவாசிகள் ஒரே நிலையில் இருந்தன என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. யாரால்? மொரார்ஜியால் அல்ல; சாட்சாத் இந்திரா காங்கிரஸ் அரசால்! "தேசப் பொருளாதார நிலை" என்பதாக நாடாளு மன்றத்தில் பட்ஜெட்டுக்கு முன் ஓர் அறிக்கை சமர்ப்பிப்பது வழக்கம். அந்த அறிக்கை இந்த உண்மையை வேண்டா வெறுப்பாக ஒப்புக் கொண்டிருக்கிறது. பாராட்டுக்குரியவர் முந்நாள் சுதந்திரா பிரமுகரும் ஜனதா அரசில் நிதி அமைச்சராயிருந்தவருமான எச். எம். பட்டேல்.



ஆக, ஜனதா ஆரோக்கியமாக இருந்தவரை தேசப் பொருளாதாரமும் ஆரோக்கியமாகவே இருந்திருக்கிறது. உட்பூசல் என்னும் புற்று நோய் முற்ற, பின்னர் நடந்தவைதாம் தெரிந்த கதையாயிற்றே!

● ● ●

அமெரிக்கர்கள் விண்வெளி நகர் அமைக்கப்போகிறார்களாம். அங்கு சூரியனின் சக்தியைப் பயன்படுத்தி மின்சாரம் தயாரிப்பார்களாம். அந்த மின்சாரம் லாஸர் கதிர் மூலம் பூமிக்கும் அனுப்பப்படுமாம். அராபியர்கள் எண்ணெய் விலையை உயர்த்திக் கொண்டே போவதால் அமெரிக்கர்கள் இப்படியெல்லாம் யோசனை செய்கிறார்கள். விண்வெளி நகர் அமைக்கச் செலவு 60 பிலியன் டாலர்களாம்.

தமிழ்நாடு ஒன்றும் பின்தங்கிவிடக்கூடாது என்பது போல் நமது மின்சார வாரியம் கடல்மீது மின்நிலையம் அமைக்கும் திட்டத்தைச் சிபாரிசு செய்துள்ளது. அமெரிக்கர்களின் ஒத்துழைப்புடன் அமையக்கூடிய இந்த மின் நிலையம், கடல் நீரில் மேல் மட்டத்துக்கும் அடி மட்டத்துக்கும் இடையே யுள்ள வெப்ப வித்தியாசத்தைப் பயன்படுத்தி இயங்கும். இத்தகைய நிலையம் அமைய இன்றைய மதிப்பீட்டின்படி 250 மிலியன் ரூபாய் செலவாகும்.

இப்படியெல்லாம் நவீனமான யோசனைகள் இருக்க, அப்பாவிகளான மேற்கு ஜெர்மானியர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? அரபு எண்ணெய் விலை உயர்ந்ததும் தங்கள் தேசத்தில் உள்ள நிலக்கரியை அதிகமாகப் பயன்படுத்தும் எளிய, செலவுக் குறைவான திட்டத்தை மேற்கொண்டார்கள். சுத்த பத்தாம் பசலிகள்!

# செய்திகள் வாசிப்பது செம்பியன்

**ஆர்.** கிருஷ்ணன் எழுதியுள்ள பாங்குகளில் என்ன நடக்கிறது என்ற கட்டுரை மிகப் பிரமாதம். சக்தி வாய்ந்த தொழிற் சங்கங்களின் ஆதிக்கத்தால் வங்கி நிர்வாகங்கள் சக்தியற்றுக் கிடக்கின்றன. பாங்கு கிளார்க்குகளுக்குக் குறைந்தது மூன்று வருடங்களுக்கு ஒருமுறை 'டிரான்ஸ்ஃபர்' என்ற சட்டமும் பாங்கு அதிகாரிகளுக்குச் சற்று அதிகாரமும் அளித்தால்தான் தற்போதுள்ள அவலநிலை சற்றேனும் மாறக்கூடும்.

புவனேஸ்வர் பி. ராமச்சந்திரன்

● பாங்குகளில் வாடிக்கையாளர் சேவை தனியார் நிர்வாகத்தில் இருந்தது போல் அரசுடைமை ஆக்கப்பட்ட பிறகு இல்லை என்பது பொதுவான குற்றச்சாட்டு. இந்நிலை இந்தியாவில் பாங்குகளில் மட்டும் இல்லை. எந்த ஒரு தனியார் நிறுவனமும் நாட்டுடைமையாக்கப்பட்ட பின்னர் இப்படித்தான் செயல்படுகிறது. இது இந்நாட்டின் தலைவிதி. இதற்குக்காரணம் நிர்வாகத்திறமையின்மை.



# பாங்குகளில் என்ன நடக்கிறது?

பாங்குகளில் சக்தி வாய்ந்த தொழிற் சங்கங்கள் இருப்பதில் என்ன தவறு? இப்படி ஒரு சக்தி வாய்ந்த தொழிற் சங்கம் இருப்பதால்தான் தொழிலாளர்களுக்கு இன்றைக்கு முழுப் பாதுகாப்பு உள்ளது. இனம் ஒரு தொழிலாளரை வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என்பது தான் திரு கிருஷ்ணனின் ஆசை போலும்.

இதற்கு மேல் வேலை செய்ய மாட்டேன் என்று ஒரு கிளார்க்கு கூறினால் ஆபீசர் கேள்வி கேட்க முடியாது என்கிறார் கிருஷ்ணன். இப்படி நிலை இன்று எந்த வங்கியில் உள்ளது?

ஒரு நாளைக்கு ஆறரை மணி நேரம் ஒரு கிளார்க் வேலை செய்தாக வேண்டும். இடையில் ஐந்து அல்லது பத்து நிமிடம் வேலை பார்க்க மறுத்தால் கூட அன்றைய முழுச் சம்பளத்தையும் கொடுக்க மறுப்பதற்குவங்கி நிர்வாகங்களுக்கு அதிகாரம் உண்டு. ஒரு கிளார்க் வேலையில் கவனக் குறைவால் தவறு செய்தால் அதைத் தட்டிக் கேட்க ஆபீசருக்கு அதிகாரம் உண்டு. அந்த ஊழியர் மீது நடவடிக்கை எடுக்கலாம். விசாரணை வைக்கலாம். இன்க்ரிமெண்டை நிறுத்தி வைக்கலாம். அல்லது வேலையிலிருந்தே நீக்கலாம். இப்படிப் பல விதிமுறைகள் வங்கியில் உள்ளன.

வேலை பார்க்காமல் ஓவர் டைம் எவரும் பெற முடியாது. வங்கி ஊழியர்கள் கடன் வாங்க வருவோரிடம் லஞ்சம் வாங்குகிறார்கள் என்பதை நான் வன்மையாகக் கண்டிக்கிறேன். வங்கியில் கடன் வழங்குவதற்கான அதிகாரம் கிளார்க்குக்கோ பியூன்களுக்கோ கிடையாது. வங்கி நிர்வாகங்களுக்குத் தொழிற் சங்கங்களை அடக்கத் திராணியில்லை என்று கூறுவதையும் ஏற்க இயலாது. இன்று எந்த வங்கியிலும்நிர்வாகம் தொழிற் சங்கத்துக்குத் தலையாட்டும் நிலையில் இல்லை. மாறாக உண்மையான தொழிற் சங்கக் கோரிக்கைகளையும் இரும்புக் கரம் கொண்டு ஒடுக்குகிறது.

வங்கிகள் நல்ல முறையில் செயல்பட கிளார்க்குகளை ஐந்து வருடத்துக்கு ஒரு முறை மாற்றல்செய்ய ஏதுவாக ஒரு அவசர சட்டம் கொண்டு வரவேண்டும் என்பது அபத்தம். 'சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தான் ஆண்டி' என்ற கதையாகிவிடும். தங்கள் அதிகாரங்களை உணர்ந்து திறம்படப் பயன்படுத்தும் ஆற்றல் உள்ளோரை மேலாளராகப் போட்டால் வங்கிகளும் சிறப்பாகச் செயல்படும்.

மதுரை ஆல்பர்ட் அல்போன்ஸ்ராஜ்

● அலுவலக நேரத்தில் வேலை பார்த்துவிட்டு அந்த வேலைக்கு 'ஓவர்டைம்' கேட்பதும், கொடுக்காதுபோனால் அன்றாட வேலையை ஒழுங்காக நடத்த விடாமல் மானேஜர்களுக்குத் தொல்லை கொடுப்பதும், வாடிக்கைக்காரர்களை அலட்சியப்படுத்துவதும் கண்கூடாகக் காணுகின்ற காட்சிகள். அலுவலக நேரத்திலேயே பார்த்த வேலையை, அலுவலக நேரத்துக்கு முன்போ, பின்போ பார்த்ததாக 'எஃப்' ரிஜிஸ்தரில் மானேஜர்கள் பொய்க் கணக்கு எழுதும்படியான நிர்ப்பந்தத்தை ஏற்படுத்துவதும், அப்படி எழுதிய பொய்க் கணக்கின் அடிப்படையில் முதல் அரை மணிக்குச் சம்பளத்தில் நூறு சதவிகிதம் அடுத்த ஒரு மணிக்கு 170. சத விகிதமும் அப்புறம் மணிக்கு 200 சதவிகிதமும் கணக்குப் போட்டு ஓவர் டைம் பெறுவதும் நல்ல சம்பளம் வாங்குகிற படித்த பட்டம் பெற்ற இளைஞர்களுக்கு அழகா?

இந்த லட்சணத்தில் ஒருவர் Cream of the educated என்று பாங்கு குமாஸ்தாக்களை வர்ணித்திருக்கிறார். (கல்கி, 15-6-80) Cream of the educated ஆக இருப்பவர்களுக்கு ஓவர்டைம் என்பதற்கு அர்த்தம் தெரியாதா?

பொது நிறுவனங்களை உள்ளிருந்தே சுரண்டும் இந்த அவல நிலைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை.

திருச்சி-18 ஓ. தண்டபாணி

● எல்லா வங்கிகளிலும் குமாஸ்தாக்களின் வேலையை ஒரு அதிகாரி சரிபார்க்கிறார். தவறு எதுவும் நடந்திருக்குமாயின் சம்பந்தப்பட்ட குமாஸ்தாவும் அதிகாரியும் அந்தத் தவறுக்குச் சம அளவில் பொறுப்பாகிறார்கள். பத்தாயிரம் ரூபாய்க்கான காசோலை ஒன்று பணம் வழங்கப்பட்ட பின் சரியானதல்ல என்று நிரூபிக்கப்பட்டால், சம்பந்தப்பட்ட குமாஸ்தாவும் அதிகாரியும் ஆளுக்கு ஐயாயிரமாகப் போட்டுக் கணக்கைச் சரிக்கட்ட வேண்டும். அதிகாரியை மாட்டிவைத்துவிட்டு குமாஸ்தாக்கள் தப்பிவிடுவதாகக் கிருஷ்ணன் எங்கிருந்து தெரிந்து கொண்டாரோ?

பாங்குகளில் அளவுக்கு அதிகமாக குமாஸ்தாக்கள் நியமிக்கப்பட்டு வேலை இல்லாமல் இருப்பதாகக் கிருஷ்ணன் சொல்கிறார். முற்பகலில் வரும் Transaction ஐப் பொறுத்தே

## ஏழு மொழி வல்லவி!

அட்டைப் படத்தில் காட்சி தரும் குமாரி சிந்தூரி சிறந்த பரத நாட்டியக் கலைஞர். கராத்தே கலையிலும் பச்சை பெல்ட் சாம்பியன். இருநூற்றுக்கு மேற்பட்ட பரத நாட்டிய நிகழ்ச்சிகளை நடத்தியுள்ள இவருக்கு ஏழு மொழிகள் அத்துபடி! மாடலிங் அனுபவமும் உண்டு! குறைந்த கட்டணத்தில் வசதி இல்லாதவர்களுக்காக ஒரு பரதப் பள்ளியை ஆரம்பிக்க வேண்டும் என்பது சிந்தூரியின் குறிக்கோள்.

ஒரு ஃபாஷன் பரேடில் சிந்தூரியைப் பார்த்ததும் வண்ணப் படத்துக்கு ஏற்ற 'சப்ஜெக்ட்' என்று உடனேயே தீர்மானித்து விட்டார் உத்ரா. தகவல்: சிக்கி



பிற்பகலில் வேலைப் பளு அமைகிறது. ஒரு நாளில் முற்பகல் Transaction கொஞ்சம் குறைவாக இருப்பின், பிற்பகலில் வேலைப் பளு குறைந்து குமாஸ்தாக்கள் சற்று ஓய்ந்திருக்கக்கூடும். இதே குமாஸ்தாக்கள் மற்ற நாட்களில் (குறிப்பாக மாதக் கடைசி மற்றும் வாரக் கடைசியில்) அலுவல் நேரம் முடிந்தும் மணிக் கணக்கில் இருந்து தமது வேலையை முடித்துவிட்டுச் செல்வதையும் கிருஷ்ணன் கவனிக்க வேண்டும்.

பாங்கு ஊழியர்களுக்கு யாரும் சம்பளமாக வாரிக் கொட்டிவிடவில்லை. மற்ற அரசாங்க அலுவலர்களின் சம்பள விகிதத்துடன் ஒப்பிடும்போது வங்கி ஊழியர்களின் சம்பளம் மிகவும் குறைவு. அப்படியே அவர்கள் அதிகம் சம்பளம் பெறுவதாக எடுத்துக் கொண்டாலும் அவர்களது கல்வித் தகுதியையும் வேலையில் அவர்கள் செலுத்த வேண்டிய கவனத்தையும் நோக்கும்போது அதை அதிக சம்பளம் என்று வருணிக்க இயலாது.

சென்னை-3 முத்துசாமி

● 1—6—80 கல்கி இதழில் ''பாங்குகளில் என்ன நடக்கிறது?'' என்ற கட்டுரை படித்தேன். பாங்க் அதிகாரிகள் சார்பில் என் மனமுவந்த நன்றி.

அந்தக் கட்டுரையை அப்படியே மொழி மாற்றம் செய்து பிறமொழிப் பத்திரிகைகளிலும் வெளிவரச் செய்து, உண்மையான அவல நிலையை மக்களின், அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வந்து, ஒரு வரவேற்கத் தக்க மாற்றம் ஏற்பட வழிவகுக்க வேண்டும்.

சென்னை-32 ஒரு பாங்கு அதிகாரி

● ''பாங்குகளில் என்ன நடக்கிறது'' என்ற ஆர். கிருஷ்ணனின் கட்டுரை ஆரம்பித்த விஷயத்தை விட்டுவிட்டு வீணான வாதங்களையும் அவதூறுகளையும் வங்கி ஊழியர்கள் மேல் வீசியெறிந்துவிட்டு உருப்படியான யோசனைகளைப் பரிசீலிக்காமல் சென்று விட்டது.

அவர் குறிப்பிடும் Working group on Customer Serviceல் தொழிற் சங்கப் பிரதிநிதிகள் அங்கம் வகிக்கவில்லை. மேலும் முழுக்க முழுக்க வங்கி நிர்வாகிகளே அங்கத்தினர்களாக இருந்த அந்தக் கமிட்டியின் அத்தனை கூற்றுகளுக்கும் எங்களது பொறுப்பு வாய்ந்த அகில இந்திய வங்கி ஊழியர் சங்கம் தனது எண்ணங்களையும் கமிட்டி கூறிய குறைபாடுகளைச் சீர்திருத்தும் முறைகளையும் அதற்குத் தன்னால் இயன்ற உதவிகளையும் வரையிட்டுக் கூறியுள்ளது.

எங்களைப் பொறுத்தவரையில் எங்களது போராட்டம் வங்கிகள் தேசியமயமாக்கப்பட்டதோடு ஓயவில்லை. பெரும் முதலாளிகளுக்கு வங்கிகளின் மொத்த டெபாசிட் தொகையில் 70 சதவீதம் வரை கடனாகக் கொடுக்கப்பட்டு வருவதை எதிர்ப்போம். சமூகத்தில் நலிந்தவர்களுக்கு மனதாரச் சேவை செய்து வருவது எங்களைப் பொறுத்தவரை உண்மையான சேவையாகும்.

வங்கியில் உயர் அதிகாரிகள் அனாவசியமான படாடோபமான செலவுகள் செய்வதை எதிர்ப்போம். உயர் அதிகாரிகள் தங்களுடைய சுயநலம் காரணமாகத் தேவையில்லாத புதிய பதவி உயர்வுகளை உருவாக்குவதையும் எதிர்ப்போம்.

மதுரை ஆர். ஞானசிராமன்

## விசிறி வசதி

சென்னையில் உள்ள பல ஏ. சி. தியேட்டர்களில் ஃபேன் வசதி கிடையாது. இப்போது மின் வெட்டு அமுலில் இருப்பதால் ஏ. சி. போடுவதை அறவே நிறுத்தி விட்டார்கள். இரண்டு, மூன்று பெடஸ்டல் ஃபேன்களை மூலைக்கொன்றாக வைக்கிறார்கள். அருகில் உட்கார்ந்திருப்பவர்களுக்குச் சரி. தூரத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் காற்றில்லாமல் அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறது.

இதைவிட கொடுமை, இதுதான் சாக்கென்று ஸ்டால்களில் பனை ஓலை விசிறிகளை விற்பனை செய்ய ஆரம்பித்து விட்டார்கள். தியேட்டருக்கு வெளியே, காம்பவுண்ட் சுவரை ஒட்டினாற்போல் ஏழைபாழைகள் விற்றாலும் பரவாயில்லை. இருபது பைசா கொடுத்து வாங்கிக் கொள்ளலாம்; ஆனால் விற்பனையாகும் ஒவ்வொரு பொருளிலும் 100% லாபம் காணும் ஸ்டால்களில் விசிறிகள் விற்பனையாவது எவ்வளவு பெரிய அநீதி! படம் பார்க்க வந்தவர்களை அவர்கள் அந்த அளவிற்கு ஏமாளிகளாக நினைக்கிறார்கள் என்பது தான் இதன் அர்த்தம்.

ஏர்கண்டிஷன் ஓடாத நாட்களில் டிக்கெட்டு விலையைத்தான் குறைக்கவில்லை....குறைந்த பட்சம் அந்த விசிறிகளை இலவசமாகவோ — அது கூட வேண்டாம் — காட்சி முடியும் வரை உபயோகப்படுத்திக் கொண்டு பின் திருப்பித் தந்து விட வேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் கொடுத்தால் என்னவாம்? கி. பூபால் சிங்



**ம**றுநாளிலிருந்து ஓய்வு பெறப் போகும் நாதமுனியை ஒரு ஜீப்பில் ஏற்றி ஆலை முழுவதும் சுற்றிய பிறகு அவருடைய நண்பர் அவரை அந்த விடுதிக்கு அழைத்து வந்தனர். மாலைகள் அணிந்த நாதமுனி வாத்திய இசை முழங்க அந்தக் கூடத்தினுள் நுழைந்தார். தலைவரும் மற்றவர்களும் எழுந்துநின்று வரவேற்றார்கள்.

முப்பத்தைந்து ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றிய பிறகு நாதமுனி ஓய்வுபெற இருந்தார். ஆலையின் வரவேற்பு வளைவை அடுத்து ஒரு முன் கம்பிக் கதவு. அருகில் ஒரு தபால் பெட்டி. அதற்குப் பக்கத்தில்தான் அவருடைய சிறிய அலுவலகம்.

அந்த அரசுத் தொழிற்சாலையில் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு காவலனாகப் பணி ஏற்றார். அடுத்த பதினைந்து வருஷங்களில் அவர்களுடைய தலைவனாகப் பதவி உயர்வு பெற்றார். நாளை அந்த இடம் காலியாகும்.

வலதுபுறம் உட்கார்ந்திருந்த காசிராம் குப்தா, ''இத்தனை ஆண்டுகளில் இந்தத் தொழிற்சாலையில் எத்தனையோ சுவையான சம்பவங்கள் நிகழ்ந்திருக்கக் கூடும். அவைகளில் ஒன்றைக் கூற முடியுமா?'' என்றார்.

நாதமுனி சாளரத்தின் வழியே வெளியே பார்த்தார். அங்கேயிருந்த பெரிய இலந்தை மரக் கிளைகளில் வால் நீண்ட பெருங் குரங்குகள் தாவிக் குதித்தன.

''ஒரு நிகழ்ச்சி மட்டும் என் நெஞ்சில் ஆழப் பதிந்திருக்கிறது.. நமது ஆலையின் முன் வாசலின் இடதுபுறத்தில் சைக்கிள் நிறுத்துவதற்காக இரண்டு நீண்ட கொட்டகைகள் இருக்கிறதல்லவா? அவற்றுக்கிடையில் இருக்கும் புல்வெளியைப் பார்த்திருப்பீர்கள்....'' அவர் ஒரு கணம் தயங்கினார். எல்லோருடைய விழிகளிலும் ஆவல் மிளிர்ந்தது.

''...அப்போது தலைவராக இருந்த ஜாக்சன் அந்த இடத்தில் ஒரு செய்குளத்தை அமைத்து நடுவில் ஓர் அழகுப் பதுமையையும் நிறுவ விரும்பினார். இப்போதுபோல் தான் இருக்கிறது. பகல் பதினொரு மணி இருக்கும். நான் நெற்றியில் திருநீறும் குங்குமமும் துலங்கக் கையில் குறுந்தடியுடன் வெளி வாசலில் நின்று கொண்டிருந்தேன். 'சாமி' என்று குரல் கேட்டது.

ஜெனரல் மானேஜர் என்னை அப்படித்தான் அழைப்பார். அவருக்குப் பக்கத்தில் துணை அதிகாரி வின்சென்ட் நின்று கொண்டிருந்தார். உடைந்த உர்தூவில் அவர் தமது திட்டத்தை என்னிடம் கூறினார். ''நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று என்னைக் கேட்டார்.

''நை சாப்'' — இது என் பதில்.

''கின் வாஸ்தே?'' வெள்ளைக்காரர்கள் அப்படித்தான் கேட்பார்கள்.

''ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் இங்கே தொழிலாளர்களில் சிலர் தொழுகை நடத்துகிறார்கள். உங்களுடைய ஏற்பாடு அதற்குத் தடையாக இருக்கும்.''

''ஜாக்சன், வின்சென்ட் இருவருமே வியப்புடன் என்னை ஏறிட்டுப் பார்த்தார்கள். மதவெறி நாடெங்கும் முழுறிக் கொண்டிருந்த சமயம் அது. மாற்றுச் சமயத்தினனை நானே இவ்வகையில் கூறவும் அவர்கள் தமது திட்டத்தைக் கைவிட்டார்கள்.

''இப்போதும் அங்கே தொழுகை நடக்கிறதல்லவா?'' குப்தா வினவினார். ''ஓ! இடைவேளைச் சங்கொலித்ததும் வெள்ளிக்கிழமைகளில் அங்கு முஸ்லீம்கள் ஒன்று கூடுவார்கள். அரை மணி நேரம் அமைதியான முறையில் தொழுகை நடக்கும். பிறகு அவர்கள் தங்கள் பணிக்குத் திரும்பி விடுவார்கள்.



# மோகன்மியா

தி. சா. ராஜு

''இந்த ஊரில் குரங்குகள் அதிகம். நமது தொழிற்சாலைக்குள்ளேயும் அவை நிறைய இருப்பதைப் பார்த்திருக்கலாம். ஆனால் எவருக்கும் தொந்தரவு இராது. இடைவேளையில் தொழிலாளர்கள் அவைகளுக்கெனச் சிறு பகுதி உணவைக் கொடுப்பார்கள். அவை பதிலுக்கு நாவற் பழங்களை உலுக்கித் தரும். அந்த மரத்தடியில் ஒரு ஹனுமார் கோயில் இருப்பதையும் நீங்கள் பார்த்திருக்கலாம்....

''அவற்றில் ஒரு குரங்குக்கு மோகன் என்று பெயர். நல்ல வளர்த்தியான உருவம். நான் வாயிலருகே தனியாக இருந்தால் என் அருகே வந்து இரண்டு காலால் நிற்கும். அதற்கு ஓர் ஆரஞ்சோ கொய்யாப் பழமோ கொடுப்பேன். நாளடைவில் அது என்னுடன் நெருங்கிப் பழகிவிட்டது. நான் அதன் கழுத்தில் ஒரு தொங்கட்டானைக் கட்டி விட்டேன். அதில் ராமர் உருவம் பதித்திருந்தது. எல்லாரும் மோகனை அடையாளம் புரிந்து கொள்ள அந்த லாக்கட் உதவியாக இருந்தது.

'' 'மோகன்' என்று விளித்தால் அது திரும்பிப் பார்க்கும். பழகியவர்களாக இருந்தால் அருகில் வந்து நிற்கும். சொறிந்து கொடுத்தால் கழுத்தைக் குனிந்து காட்டும்.

''ஒவ்வொரு வெள்ளிக் கிழமை யன்றும் அந்த சைக்கிள் ஸ்டாண்டின் அருகில் வந்து மோகன் நிற்பான். அந்த அல்டார்கள் தொழுகை நடத்தும் அரை மணி நேரமும் அங்கேயே அமைதியாக இருப்பான். அவர்கள் கலையவிருக்கும் வேளையில் மதில் சுவரின் மேல் ஏறி ஓடிவிடுவான். இவ்வாறு ஒவ்வொரு வாரமும் தவறாமல் நிகழ்வது உண்டு. குளிரோ, மழையோ, வெய்யிலோ எப்படி இருந்தாலும் சரி, அந்த விலங்கினுடைய பொழுதைக் கணிக்கும் அறிவைக் கண்டு நான் வியந்திருக்கிறேன்.

''பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு என்று நினைவு. இந்தத் தொழுகை நடத்துவதற்கென்றே ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் ஹாஃபீஸ் ஒருவர் வரத் தொடங்கினார். அகமத் என்பது அவருடைய பெயர். புனித நூல் முழுவதையும் மனப் பாடம் செய்தவர்களுக்கு ஹாஃபீஸ் என்ற பட்டம் கிடைக்கும். அவர் ஒரு ஹாஜியும் கூட. அவர் இந்த விலங்கினிடம் விசேஷப் பரிவு காட்டத் தொடங்கினார். மோகன் அவரருகே சென்று இரண்டு கால்களால் நின்று சலாம் வைப்பான். பறவை இறகுகளினாலான தொப்பி ஒன்றை அவனுக்கு அணிவித்தார். அவன் அதை ஒரு மூலையில் தவற விட்டுவிட்டான். இதைத் தேடிக் கண்டு பிடித்து வைத்திருந்தேன். வெள்ளிக் கிழமை யன்று அதை அணிவிப்பேன். தொழுகை முடிந்து திரும்பும்போது பெற்றுக் கொள்வேன். ஆலைத் தொழிலாளர்களுக்கெல்லாம் இது ஒரு வேடிக்கை. அவர்கள் இப்போது அந்த விலங்கை மோகன்மியா என்று அழைக்கத் துவங்கினார்கள். அவன் திரும்பிப் பார்த்துப் பல்லைக் காட்டுவான். பிறகு மரக் கிளையைப் பற்றிக் கொண்டு தாவி ஓடி விடுவான்.

''ஹாஃபிஸ் அகமத் தொழுகைக்கு வரத் தொடங்கியதிலிருந்து நகரத்திலுள்ள






கலந்திருக்கும் கருங்குழலில் அலையிருக்கும் சந்து
வளர்ந்திருக்கும் பிறைநுதலில் வியர்த்திருக்கும்

நனைந்திருக்கும் பனிவிழியில் கனிவிருக்கும் என்னை
நினைந்திருக்கும் கனவுகளில் தவிப்பிருக்கும்

குமிழ்ச்சிரிப்பில் முல்லைப்பூச் சரமிருக்கும் அங்கே
அமிழ்திருக்கும் கன்னலைப்போல் மொழியிருக்கும்

தழைந்திருக்கும் தாவணியில் தென்றிருக்கும் நாளும்
குழைந்திருக்கும் குங்குமத்தில் குணமிருக்கும்

துடிப்பிருக்கும் இடையிருக்கும் நடையிருக்கும் அங்கே
நடிப்பிருக்கும் தேரசையும் நளினத்தின்

அரசிருக்கும் நாணத்தின் முரசிருக்கும் எனக்கு
பரிசிருக்கும் பூவிதழில் பரிவிருக்கும்

இரவிருக்கும் இமைக்காத விழியிருக்கும் என்றும்
உறவிருக்கும் எக்கந்தான் துணையிருக்கும்

உயிரிருக்கும் வரைநெஞ்சில் நினைவிருக்கும் அன்புப்
பயிரிருக்கும் வாழ்வில்பின் எதுஇருக்கும்?

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

பலசமய நிறுவனங்கள் அந்த நிகழ்ச்சியில் சிரத்தை காட்டத் துவங்கினார்கள். பல தனவணிகர்கள் தொழுகை நடத்துபவர்களுக்காகப் பழங்களும், இனிப்புக்களும் அனுப்பத் தொடங்கினர்.

"1965ம் ஆண்டின் இறுதிப் பகுதியில் அண்டை நாட்டுடன் மோதல் ஏற்பட்டதல்லவா? அப்போது நகரத்தில் சமயக் கலவரம் பற்றிக் கொள்ளும் நிலையிருந்தது. எந்த நிமிஷமும் கனல் பறக்கும் என்றே தோன்றியது.

''அப்போது தொழிற்சாலையின் தலைமை அதிகாரியாக இருந்தவர் ஒரு பார்ஸிக்காரர். இந்தத் தொழுகையை ஆலையின் அருகில் நிகழ்த்துவதைத் தடை செய்யலாமா என்று கூட யோசித்தார். என்றாலும் ஒவ்வொரு வெள்ளியும் பிரார்த்தனை நடந்து கொண்டு தான் இருந்தது. மோகனும் தவறாமல் அங்கு போய்த் தொப்பி அணிந்து நிற்பான்.

''அன்று வழிபாடு முடிந்து ஹாஃபிசின் இறுதி உரை முடியும் தறுவாயில் காமாபூரியிலிருந்து ரிக்ஷாவில் லட்டுக்கள் வந்து இறங்கின. ஒரு கூடை நிறைய இருக்கும். திடீரென்று மோகன் தன் இருப்பிடத்தை விட்டுத் தாவினான். அந்தக் கூடையைப் பிடுங்கித் தரையில் வீசி அடித்தான். பிறகு கிறீச் என்று கூறியவாறு மரத்தில் தாவி ஏறி ஓடிவிட்டான். அவ்வளவு இனிப்புருண்டைகளும் மண்ணில் கலந்து போயின.

''பலருக்கும் இதில் ஏமாற்றம். அடுத்த தடவை மோகனைப் பார்த்தால் சுட்டுவிடுவதாகக் கூட மஞ்சூகி பயமுறுத்தினார். அவர் ஓர் உள்ளூர்ப் பயில்வான்.

''இந்தக் குரங்கு ஏன் இவ்வாறு செய்தது என்று எனக்கும் புரியத்தான் இல்லை. மறுநாள் சனிக் கிழமை. ஏதோ பண்டிகை தினம். விடுமுறை. திங்களன்று காலையில் நான் தொழிற்சாலைக்கு வந்தபோது மதில் சுவரில் ஒரே காக்கைக் கூட்டம். அந்த இனிப்பை உண்ட காகங்கள் சாலை ஓரத்தில் செத்துக் கிடந்தன.

''விவரம் விளங்கச் சில கணங்களே பிடித்தன. விரைவில் எல்லாவற்றையும் அப்புறப்படுத்தினேன். இந்தத் தகவல் தொழிலாளர்களுக்கு எட்டினால் சுமுகமான உறவில் புரைசல் ஏற்படும் என்பதை உணர்ந்தேன். மதர்சாவுக்குச் சென்று ஹாஜி சாகிப்பைச் சந்தித்தேன். அவரிடம் இந்த விவரத்தைக் கூறியபோது அவர் என்ன சொன்னார் தெரியுமா?'' நாதமுனியின் குரல் கமறியது. தொழிலாளர்கள் அனைவரும் தங்கள் கவனத்தை அவர் நின்ற பக்கம் திருப்பினார்கள்.

பளிச் பளிச் என்று மின்னிவிட்டுக் குழல் விளக்குகள் பற்றிக் கொண்டன. நேரத்தை அறிவிக்கும் நீள் சங்கு ஒலித்தது. அதன் ஒலி அடங்கியதும் காவலர் தலைவர் கொடியை இறக்கும் உத்தரவு வாசகத்தைக் கூறினார். பழக்கத்தின் விளைவினால் நாதமுனியும் கையை மடித்து சலாம் வைத்தார்.

''ஹாஜி என்ன சொன்னார்?'' குப்தா ஆவலுடன் வினவினார்.

''இறைவன் தொண்டர்களுக்கு எப்படியும் யார் மூலமாவது உதவி வந்துவிடும். மோமின் — அதாவது நம்பிக்கை உள்ளவன் எப்போதும் தனியாக இருப்பதில்லை. மேலும் ஒவ்வொரு தொழுகை நேரத்திலும் மோகன் மியா வந்து நிற்கும்போதெல்லாம் எனக்கு என்ன நினைவு வரும் தெரியுமா? அடுத்துள்ள கோயிலில் வழிபாடு முடியும் வேளையில் பூசாரி இறுதியாக ஒரு வாசகம் கூறுவார்: 'யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்....'

''இறைவனுக்கு எத்தனையோ பெயர்கள். அவர் கையை உயர்த்திக் காட்டினார். 'யஹோவா, அல்லா, ராம்,என்று. அறிவில் குறைந்தது என்று நாம் எண்ணிக்கொண்டிருக்கும் மோகன் மியாவுக்கும் கூட இந்த விவரம் தெரிந்திருக்கிறது.'''

திருநீறு துலங்கிய நெற்றியுடன் வீற்றிருந்த நாதமுனியை நோக்கி வணங்கிவிட்டுத் தொழிலாளர்கள் ஒவ்வொருவராக விடைபெற்றுக் கொண்டனர்.

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




## காம்ப்ளான்®

**ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-களுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள் —அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள், டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

"குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி"
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக:
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

# உறவின் கைதிகள்




ஜெயலலிதா


Sigh no more, ladies, sigh no more
Men were deceivers ever,
One foot in Sea and one on shore
To one thing constant never

- Shakespeare 1564-1616
in "Much Ado About Nothing."

## 2

ராஜீவ் முகத்தில் சலிப்பும் கோபமும் தோன்றியது. "இப்பவே லேட் ஆயிடுச்சு கரேஷ். எதுக்காக அவங்களை உள்ளே விட்டே? ஏதாவது சொல்லி அவங்களை அனுப்பியிருக்கக் கூடாது? இதெல்லாம் நான் உனக்குச் சொல்லியா தரணும்?"

மன்னிப்புக் கோரும் வகையில் கரேஷ் அவனைப் பார்த்தான்.

"ரொம்ப சாரி சார். எப்படியாவது அவங்களைத் தட்டிக் கழிச்சு அனுப்பிட ணும்னு எவ்வளவோ ட்ரை பண்ணேன் சார், என்னை நம்புங்க. ஆனா இந்தக் காலத்து காலேஜ் பெண்கள் — அப்பப்பா! அவங்க கிட்டே ஒண்ணும் நடக்காது சார்! உங்களைப் பார்க்காமே போகவே மாட்டேனுட்டாங்க! ஒரே ரகளை, ஒரே தகராறு. என்னையே தள்ளிக்கிட்டு உள்ளே வந்துட்டாங்க. அவங்க செய்யற அட்டகாசத்தைப் பார்த்துக் கேட் கிட்டே பெரிய கூட்டமே சேர ஆரம்பிச் சுட்டது. அதுக்கு மேலே உள்ளே விடலேன்னா ரொம்ப அசிங்கமாப் போயிருக்கும் சார்..."

"உம், உம் — சரி சரி." ராஜீவுக்கு மிகவும் எரிச்சலாக இருந்தது. "காலையிலிருந்து சரி யான கழுத்தறுப்பு! ஏற்கனவே நான் லேட், இப்ப இது வேறையா? சரி, போற வழியிலே பார்த்துப் பேசித் தொலைச்சிக்கிறேன். தலை யெழுத்து! எங்கே உட்கார வச்சிருக்கே?"

"ட்ராயிங் ரூமிலே சார். எல்லாருக்கும் காப்பியும் கொடுக்கச் சொன்னேன்."

"குட்! நல்ல காரியம் செய்தாய்!" என்று சொல்கின்ற வகையில் ராஜீவ் கரேஷைத் தட்டிக் கொடுத்தான். இந்த மாதிரி விஷயங் களை யெல்லாம் கரேஷுக்குச் சொல்லித் தர வேண்டுமா என்ன? அவன்தான் பப்ளிக் ரிலேஷன்ஸ் விஷயத்தில் புலி ஆயிற்றே! வந்திருக்கும் மாணவிகளை ட்ராயிங் ரூமில் அமரச் செய்வதும் காப்பி கொடுத்து உபசரிப்பதும் சிறு விவரங்கள் போலத் தோன் றலாம். மிக மிக சாதாரண விஷயங்கள். ஆனால் இந்தச் சிறிய விஷயங்களை மிக நுணுக்க மாகக் கவனித்து வந்ததால்தான், ராஜீவுக்குப் பொதுமக்களிடையே அத்தனை பெரிய இமேஜ் இருந்தது. சிறு துளிகள் சேர்ந்தால்தான் பெரும் வெள்ளமாகும். பணக்காரனோ, ஏழையோ; படித்தவனோ படிக்காதவனோ; வயதில் பெரியவர்களோ, சிறியவர்களோ; அனைவரிடமும் இனிமையாகப் பழகும் விதத் திலும், அவர்களை அணுகும் முறையின் மூலமாகவும், ராஜீவ் தான் ஒரு "பர்ஃபக்ட் ஜென்டில்மேன்" என்று பெயர் எடுத்திருந் தான். ராஜீவ் குமார் பண்புள்ளவன், மரி யாதைதெரிந்தவன், வீட்டுக்கு யார்வந்தாலும் அவர்களை அன்புடன் உபசரிப்பவன், வாரி வழங்கும் வள்ளல் என்றெல்லாம் பொது ஜனங்கள் மத்தியில் ராஜீவைப் பற்றி ஒரு மிக உயர்வான அபிப்பிராயம் நிலவியது. அந்த இமேஜ் கெடாமல் இருக்க, அதை மென்மேலும் வளர்க்க, ராஜீவும் அவனைச் சுற்றி இருந்தவர்களும் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருப்பார்கள்.

ராஜீவ் மடமடவென்று மாடிப் படிகளில் இறங்கிக் கீழே சென்றான். சாதாரண மாடிப் படிகள் இல்லை. பளிங்கினால் செய்யப்பட் டவை. படிகளுக்கு ஆதரவாக இரும்பில் அழகிய வேலைப்பாடமைந்த சிறு தூண்க ளோடு கூடிய கைப்பிடிச் சுவர். டைனக்கும் தேக்கு மரத்தால் அமைக்கப்பட்டிருந்தது. அந்தக் கைப்பிடிச் சுவர் மீது கையே வைக் காமல் ராஜீவ் கிடுகிடுவென்று வாலிப வேகத் தோடு படிகளில் இறங்கி, ட்ராயிங் ரூமுக்கு வெளியே ஒரு விநாடி நின்றான்.

அந்த ஒரு விநாடிக்குள் முகத்தின்மீதிருந்த சலிப்பைத் துடைத்துவிட்டு, அதற்குப் பதி லாக வசீகரிக்கும் புன்சிரிப்பை வரவழைத் துக்கொண்டான். ராஜீவ் ட்ராயிங் ரூமுக் குள் பிரவேசிக்கவே, அங்கே வெவ்வேறு சோஃபாக்களில் அமர்ந்திருந்த ஒன்பது பெண்களும் எழுந்து நின்று வணக்கம் கூறி னார்கள். எல்லோரையும் அன்பாக ராஜீவ் வரவேற்றான்.

''குட் மார்னிங், குட் மார்னிங்! ஏன் நிக்கிறீங்க? ப்ளீஸ் ஸிட் டவுன்!'' என்றான் மிகையான புன்னகையோடு. அவன் சிரிப்பையும், அவர்களை வரவேற்கும் தோரணையையும் கண்டு, வந்திருந்த கல்லூரி மாணவியர் அனைவருமே மயங்கிச் சொக்கி விட்டனர். அவர்கள் வந்திருப்பதை அறிந்து, ஓரிரு நிமிடங்களுக்கு முன்பாகத்தான், மாடியில் அவன் எப்படிச் சலித்துக் கொண்டான் என்பதை அப்பெண்களில் ஒருவர்கூட யூகித்துப் பார்த்திருக்க முடியாது. ஏதோ வெகு நாட்களாகக் காணமல் போன நண்பர்களை மீண்டும் காணும்போது எவ்வளவு குதூகலம் உள்ளத்தில் உண்டாகுமோ, இந்த மாணவியரைக் கண்டதும் அந்த அளவு மகிழ்ச்சி தனக்கு உண்டானது போல் நடித்தான் ராஜீவ். ஆளுக்குத் தகுந்த மாதிரி பேசுவதும், சமய சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி நடந்து கொள்வதும், ராஜீவுக்குத்தான் கைவந்த கலையாயிற்றே? யாரிடம் என்ன கூற வேண்டும்? எப்படிக் கூற வேண்டும், எப்போது என்ன செய்ய வேண்டும், என்று அரசியல்வாதிகள்கூட அவனிடம் சமயோஜித புத்தியில் பாடம் கற்றுக் கொள்ளலாம். அந்த அளவுக்குப் புத்தி கூர்மையும் வாக்கு சாதுரியமும் கொண்டவன் அவன்.

''வாட் கேன் ஐ டூ ஃபார் யூ?'' என்று ராஜீவ் கேட்டான். வந்திருந்த ஒன்பது பெண்களில் யாருக்கும் உடனே பேச்சு வரவில்லை. அவனையே பார்த்துக் கொண்டு, வாயைப் பிளந்தபடி உட்கார்ந்திருந்தார்கள்.

டிராயிங் ரூமுக்குள் காலடி எடுத்து வைத்ததும், அந்த ஒன்பது பெண்களுக்குமே நாவைக் கட்டிப் போட்டது போல் ஆகிவிட்டிருந்தது. அந்த அறைக்கு ''டிராயிங் ரூம்'' என்று பெயர் பொருந்தாது. பழைய காலத்து மகாராஜா அரண்மனையின் ''தர்பார் ஹால்'' என்றால் பொருத்தமாக இருக்கும். அந்த அளவுக்குக் கம்பீரமாகவும், படாடோபமாகவும் இருந்தது.

கூரையின் நடுவிலிருந்து ஒரு பிரும்மாண்டமான அலங்காரக்கண்ணாடி



லஸ்தர் விளக்கு தொங்கிற்று. அதனைச் சுற்றி நான்கு சிறிய லஸ்தர்கள் தொங்கின. இவை யெல்லாம் ஃபிரான்ஸி லிருந்து வரவழைக்கப்பட்டவை. தங்க ஃபிரேம்கள் மாட்டப்பட்ட பெரிய பெரிய ஓவியங்கள் சுவர்களை அலங்கரித்தன. தரை முழுவதும் பெர்ஷியன் கார்பெட்கள் விரிக்கப் பட்டிருந்தன. ஹாலில் இருந்த சோஃபாக்கள் அனைத்துமே தங்க, பழுப்பு நிறத்தில் ப்ரொகேட் துணியால் மூடப் பட்டிருந்தன. மேல் சுவரிலிருந்து தரை வரையில் இருந்த கண்ணாடி ஜன்னல்களுக்கு முன், அதே தங்க மஞ்சள் நிறத்தில் லேஸ் துணியில் திரைகள் தொங்கின. ஆங்காங்கே ரோஸ்வுட்டில் பல சிறிய காஃபி மேஜைகள் வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றின் மீதும் கிரிஸ்டல் கண்ணாடியில் அழகான வேலைப்பாடுள்ள மேஜை விளக்குகளோ, ஆஷ்ட்ரேக்களோ வைக்கப்பட்டிருந்தன.

இந்தக் கண்கொள்ளாக் காட்சியைக் கண்டவுடன் ஒன்பது பெண்களும் ஸ்தம்பித்து நின்று விட்டார்கள். அவர்கள் எல்லோருமே ஓரளவு வசதியுள்ள குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள்தான் என்றாலும் இந்த அளவு டாம்பீகமான மாளிகையை அவர்கள் இதுவரை சினிமாப்படங்களில்தான்பார்த்திருந்தார்கள். நிஜ வாழ்க்கையிலும் பிரமிப்பூட்டும் சுகபோகங்களுடன் இப்படியும்சிலர் இந்தக் காலத்திலும் வாழ்ந்து வரு



கிறார்கள் என்று, ராஜீவுடைய மாளிகைக்குள் புகும்வரை அவர்கள் எண்ணிக்கூடப் பார்த்தது கிடையாது.

அப்பெண்கள் எல்லோருமே பதினேழு, பதினெட்டு வயதுக்குள் இருப்பவர்கள். உலகத்தைப் பற்றி இன்னும் புரியாத வயது. சாதாரணமாக இளமை வேகத்தில் வளவளவென்று பேசக் கூடியவர்கள். இந்தக் காலத்துக் கல்லூரி மாணவிகளுக்கே இயல்பான துணிச்சலும், வாய்த்துடுக்கும் நிறைய பெற்றிருப்பவர்கள்.

கேட்டில் கூர்க்காக்களையும், சுரேஷையும் மடக்கி, திக்குமுக்காட வைத்து, அவர்களையே ஒருபுறம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, இளமை ததும்பும் ஆவலோடு உள்ளே நுழைந்த பெண்கள், அந்த ஹாலுக்குள் காலடி வைத்ததும், வியப்பில் வாய் அடைத்துப்போய் மௌனமாகி விட்டார்கள்.

நிசப்தமாக, பேச்சு மூச்சில்லாமல் உட்கார்ந்த அவர்களைப் பார்க்கும்போது ''இந்தப் பூனைக் குட்டிகளும் பால் குடிக்குமா?'' என்று வியக்கும்படி காட்சி அளித்தார்கள்.

வெள்ளைச் சீருடை அணிந்த இரண்டு வேலைக்காரர்கள் வெள்ளி ட்ரேக்களில் விலை உயர்ந்த வெளி நாட்டுப் பீங்கான் கப்-சாஸர்களில் காப்பி கொண்டு வந்தபோது, அப்பெண்கள் இன்னும் அதிகமாக அசந்து போய்விட்டார்கள். காப்பியைக் குடித்து விட்டு, பேசலாமோ, பேசக் கூடாதோ, பேசினால் தப்பாகுமோ என்று பயந்தவாறே, சப்த நாடியும் அடங்கிப் போன மாதிரி உட்கார்ந்திருந்தார்கள்.

ராஜீவ் உள்ளே வந்ததும் எல்லோரும் சடாரென்று துள்ளி எழுந்து அட்டென்ஷனில் நின்றார்கள். ராஜீவ் அவர்களை அன்புடன் வரவேற்றதும், உட்காரச் சொன்னதும் அவர்களுக்குக் கொஞ்சம் தெம்பூட்டுவதாக இருந்தாலும், இன்னும் பழைய உற்சாகமும் வேகமும் முழுமையாகத் திரும்பி வருக்க வில்லை.

''வெல், வாட் கேன் ஐ டு ஃபார் யூ?'' என்று ராஜீவ் மறுபடியும் கேட்டான். உள்ளுக்குள் பொறுமையை இழந்து புகைந்து கொண்டிருந்தான். ''காலையில் ஷூட்டிங்குக்குப் புறப்படும்போது நல்ல கழுத்தறுப்பு இது!'' என்று நினைத்தாலும் வெளியே மட்டும் அந்தப் புன்சிரிப்பு ஒட்டி வைத்தாற்போல் அவன் முகத்தை விட்டு அகலவே இல்லை.

மற்ற பெண்கள் எல்லோரும் இன்னும் தங்கள் நாவைக் காக்கை கொத்திக்கொண்டு போய்விட்டதா, குருவி திருடிக் கொண்டு பறந்துவிட்டதா என்று தேடிக் கொண்டிருந்த வேளையில், உஷா தைரியத்தை வரவழைத்துக் கொண்டாள். 'சே! எல்லோரும் பேசாமல் இப்படியே மக்குகள் மாதிரி உட்கார்ந்திருந்தால் அவர் நம்மைப் பற்றி என்ன நினைப்பார்?' என்று நினைத்து, துணிச்சலோடு முந்திக் கொண்டாள்.

''சார், நாங்க எல்லாரும் கல்லூரி மாணவிகள். இன்னும் இரண்டு வாரம் கழிச்சு எங்க கல்லூரி ஆண்டு விழாவைக் கொண்டாடப் போறோம். ஸ்டூடண்ட்ஸ் எல்லாருமா



# ராம், ராபர்ட், ரஹீம்

ஒரு படம் ஒரு மொழியில் வெற்றிபெற்று விட்டால் அது மற்ற மொழிகளிலும் வெளி வருவது தவிர்க்க முடியாததாகி விட்டது. ஹிந்தி ''அமர் அக்பர் அந்தோனி'' தெலுங்கில் ''ராம் ராபர்ட் ரஹீம்'' என்று தயாராகி அதையே தமிழிலும் மொழி மாற்றம் செய்து வெளியிட்டிருக்கிறார்கள். போதாதற்கு சங்கர் சலீம் சைமன் ஏற்கனவே தமிழில் வந்திருக்கிறது.

சின்ன வயதில் பெற்றோர்களை விட்டுப் பிரிந்த மூன்று சகோதரர்கள் எங்கோ எப்படியெல்லாமோ வளர்ந்து கடைசியில் எல்லோரும் ஒன்று சேருகிறார்கள். ஒருவன் ஹிந்துவாக, ஒருவன் கிறிஸ்துவனாக, ஒருவன் முஸ்லிமாக.

படம் முழுதும் 'டிஷ்யூம் டிஷ்யூம்' நிரவி வருகிறது. ஸ்டைல் மன்னன் ரஜனிகாந்த் எல்லாவித ஸ்டைல்களிலும் சண்டையிட்டு அருமையாக நடித்திருக்கிறார். ஸ்ரீதேவி, சுநீதா, ஜெயலட்சுமி ஆகிய மூன்று பேரும் காதல் களியாட்டங்களில் சக்கைப் போடு போட்டிருக்கிறார்கள். கிருஷ்ணா, சந்திர மோகன், இருவரும் ராபர்ட்டாகவும் ரஹீமாகவும் அமர்க்களப்படுத்துகிறார்கள்.

கண்ணுக்குக் குளிர்ச்சி: புஷ்பலா கோபி கிருஷ்ணாவின் வண்ண ஒளிப் பதிவு.

பாராட்டுக்குரியது: நடிகை விஜய நிர்மலாவின் டைரக்ஷன்.

கிளுகிளுப்பு: மருதகாசியின் ''ஒருதரம் முத்தமிட்டுக்கோ'' என்ற பாடல், எஸ்.பி. பாலசுப்பிரமணியம், பி. சுசீலாவின் குரலில் ஒலிக்கும்போது.

ராம் ராபர்ட் ரஹீம் திரைப் படம்: தேங்காய் மாங்காய் பட்டாணி சுண்டல்!

—கார்த்தன்

---

சேர்ந்து நாடகம் நடத்தப் போறோம். அந்த நிகழ்ச்சிக்கு நீங்கதான் தலைமை வகிக்கணும்கறது எங்க கல்லூரி மாணவியர் எல்லோருடைய ஆசை. அதைப் பத்தி உங்ககிட்டே கேக்கறதுக்காகத்தான் வந்திருக்கோம்'' என்றாள்.

ராஜீவ் உஷாவைப் பார்த்தான். அதுவரை அவன் அங்கே இருந்த பெண்கள் ஒருவரையும் சற்றுக் கவனிக்கவில்லை. சீக்கிரமாக இரண்டொரு வார்த்தைகளைப் பேசிவிட்டு ஷூட்டிங்குக்குப் புறப்பட வேண்டுமே என்பதிலேயே அவன் சிந்தனை இருந்ததால், அவர்களில் யாருடைய முகத்தையும் அவன் சரியாகப் பார்க்கவில்லை.

உஷா பேசியதும், ராஜீவ் தன் பார்வையை அவள் பக்கம் திருப்பினான். உஷா உடனேயே அவன் கவனத்தை முழுமையாக ஈர்த்தாள்.

(தொடரும்)



சென்னை வழக்கறிஞர் திரு கே. ராஜா அவர்களின் பேத்தியும் திரு ஆர். துரைராஜன் அவர்களின் குமாரத்தியுமான சௌபாக்கியவதி சரஸ்வதி என்கிற சுஜாதாவிற்கும் ஓய்வு பெற்ற ஐ. நா. அதிகாரி திரு என். வி. சுப்பிரமணியன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி ராமகிருஷ்ணன் என்கிற கண்ணனுக்கும் சென்னையில் சமீபத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. காலையில் நடைபெற்ற முகூர்த்தத்திற்கும் மாலையில் நடைபெற்ற வரவேற்பிற்கும் ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்

தெய்வங்கள் பலபல சிந்தைசெய் வாரும்
சோகதி பலபல செப்புகின் றாரும்
பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்
பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்
மெய்வந்த திருவருள் விளக்கம்ஒன் றில்லார்
மேல்விளைவு அறிகிலர் வீண்கழிக் கின்றார்
எய்வந்த துன்பொழித்து அவர்க்குஅறிவு அருள்வீர்
எனைப்பள்ளி எழுப்பிமெய் இன்பம்தந் தீரே!

— திருஅருட்பா

அன்று ஞாயிற்றுக்கிழமை. ரமா, ரங்கத்தின் வீட்டை அடைந்தபோது பிற்பகல் இரண்டு மணி இருக்கும். ரங்கம் சினிமாவுக்கோ அல்லது வேறு எங்காவதோ போக மாட்டாள் என்பதால் ரமா நம்பிக்கையுடன் வந்தாள். அவள் ரங்கத்தின் தனியறையை அடைந்தபோது ரங்கம் ஏதோ படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளைப் பார்த்ததும் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு ''வா, வா...'' என்றாள்.

அவளுக்கு அருகில் உட்கார்ந்து அவள் மூடிவைத்த புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்ட ரமா, ''என்னது? 'தி டீச்சிங் ஆஃப் ஸ்வாமி தயானந்தா!' அடி சக்கை'' என்று புத்தகத் தலைப்பை இரைந்து படித்துவிட்டு ''நான் உன்னைப் பார்க்க வந்திருக்கும் தலைப்புக்கும் இந்தத் தலைப்புக்கும் சம்பந்தமே இல்லை'' என்று கூறிவிட்டுச் சிரித்தாள்.

ரங்கம் கடகடவென்று தானும் சிரித்தாள். ''ஏய் ரமா! உனக்கு வேறு வேலை இல்லையா? நீ மாட்டிக் கொண்ட வலையில் என்னையும் சிக்க வைப்பதில் உனக்கென்ன சந்தோஷம்? 'யான் பெற்ற துன்பம் பெறுக இவ்வையகம்' என்ற கெட்ட எண்ணமா?'' என்றாள்.

''ரங்கம், அப்படிச் சொல்லாதே. நான் ஒன்றும் எந்த வலையிலும் மாட்டிக் கொள்ள வில்லை. எனக்குப் பிடித்தவரை மணந்து கொண்டு நான் சந்தோஷமாக இருக்கிறேன்.''

''உங்களுக்குள் அபிப்பிராய பேதமோ, சண்டை பூசலோ இல்லவே இல்லையா?''

''அபிப்பிராய பேதங்களுக்கும் சந்தோஷமாக இருப்பதற்கும் என்னடி சம்பந்தம்? அபிப்பிராய பேதங்களும் எண்ணப் போக்கில் இருக்கும் வித்தியாசங்களும் ஒருபோதும் உண்மையான மனசைப் பாதிப்பதில்லை. இன்னும் சொல்லப் போனால் அவை இல்லாத வாழ்க்கை பெருங்காயம் இல்லாத ரசம் மாதிரி!''

''நன்றாகத்தான் சப்பைக் கட்டு கட்டுகிறாய்.''

''சப்பைக் கட்டு ஒன்றுமில்லை. உண்மையைத்தான் சொல்கிறேன். கல்யாணம் செய்து கொண்டவர்கள் எல்லோரும் சந்தோஷமாக இருக்க மாட்டார்கள் என்பது ரொம்பவும் தப்பான முடிவு. இதன்படி பார்த்தால் கல்யாணம் செய்து கொள்ளாதவர்கள் எல்லோரும் சந்தோஷமாக இருக்க வேண்டும் இல்லையா? அப்படியும் இல்லை. எனவே அவரவர் சந்தோஷம் — அது இரு மணம் ஆன நிலையிலும் சரி, ஆகாத நிலையிலும் சரி — அவரவர் கையில்தான் இருக்கிறது...''





''நான் ஒப்புக் கொள்கிறேன். அதே நேரத்தில் இந்த நிலையில் என் சந்தோஷத்துக்கு எந்தக் குறைச்சலும் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். நீ ஏதோ சதித் திட்டத்துடன்தான் இங்கே வந்திருக்கிறாய் என்பது நிச்சயமாய்த் தெரிவதால் முதலிலேயே சொல்லி விடுகிறேன். கல்யாணத்தைத் தவிர வேறு எதைப் பற்றி வேண்டுமானாலும் பேசு.''

ரமா வாய் விட்டுச் சிரித்து விட்டுச் சொன்னாள்: ''அடியே, ரங்கம்! இது மாதிரிப் பேசி என் வாயை அடைக்காதே. அதைப் பற்றிப் பேசத்தான் நான் முக்கியமாக வந்திருக்கிறேன்.... நம் செக்‌ஷனில் இருக்கும் அனந்தராமனுக்கு உன்னை ரொம்பப் பிடித்திருக்கிறதாம். அதனால் உன்னைக் கேட்கச் சொன்னான். ரொம்ப நல்ல பையன், சாது. நீ என்ன நிபந்தனை விதித்தாலும் ஏற்கத் தயாராக இருக்கிறான்... மாட்டேன் என்று சொல்லி விடாதே. உடைந்து போய்விடுவான். அவன் உன்னை ரொம்பவும் நேசிக்கிறான். ஒரு சம்பாதிக்கிற மனைவியை வேட்டையாடிப் பிடிக்கும் எண்ணத்தில் இப்போதெல்லாம் தங்களுடன் வேலை பார்க்கும் எவளையாவது காதலிக்கச் சில ஆண்கள் முயற்சி செய்கிறார்களே, அவர்களின் கூட்டத்தில் இவன் இல்லை. இவன் உண்மையாகவே உன்னை விரும்புகிறான். தன் மனசைப் பற்றி என்னிடம் சொல்லி முடிப்பதற்குள் எவ்வளவு வெட்கப்பட்டு விட்டான்!'' என்றாள்.

''இந்த வேப்பிலை அடிக்கிற வேலையெல்லாம் என்னிடம் வேண்டாம். என் மனநிலை கல்யாணத்துக்கு ஏற்றதில்லை. என்னால் அது முடியாத காரியம். எனவே அவனிடம் உண்மையைச் சொல்லிவிடு. கண்டிப்பாகச் சொல்லிவிடு.'' — பேச்சு அழுத்தம் திருத்தமாக வெளிப்பட்ட தோரணை மேலே பேச்சுக்கு வழியில்லை என்பதை உணர்த்தியதால் ரமா அவள் தலையில் குட்டினாள்.

''ரொம்பக் கல் மனசுடி உனக்கு! எவ்வளவு நல்லவன் அவன். அவனைப் போய் நிராகரிக்கிறாயே?''

''சரி, காப்பி சாப்பிடுகிறாயா? இல்லாவிட்டால் வேறு ஏதாவதா?''

''நான் உன் அப்பா அம்மாவைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிவிட்டுப் போகப் போகிறேன். உன்னுடன் இனி என்னடி பேச்சு?'' என்று சொல்லிவிட்டு ரமா அவர்களைத் தேடிப் போனாள்.

# என்னைக் காதலிப்பது உண்மையானால்...

## ஜோதிர்லதா கிரிஜா

இருவரும் அவனுடன் சேர்ந்து கொண்டு ஒரு பாட்டம் அழுதார்கள். முடிவில் அவன் அப்பா சொன்னார்: ''இவள் இப்படி இருப்பதற்கு என்ன காரணம் தெரியுமோ? என் அண்ணா ஒருவர் இருந்தார். இப்பொழுது அவர் காலமாகி விட்டார். அவர் கல்யாணமே செய்து கொள்ளவில்லை. எங்களுடன்தான் இருந்தார். ரங்கத்தின் மீது அவருக்கு ரொம்ப ஆசை. 'பெரியப்பா, பெரியப்பா' என்று ரங்கம் உயிரையே விடுவாள். அவர்தான் சின்ன வயதிலிருந்தே ராமகிருஷ்ணர், விவேகானந்தர் இவர்களைப் பற்றியெல்லாம் சொல்லிச் சொல்லி அவள் மனதைப் பாழ்படுத்தி விட்டார்... சின்ன வயதில் விதைத்த விதை இன்று பெரிய மரமாகி விட்டது. வேரூன்றிப் போன அதை வெட்டுவது சாத்தியமே இல்லை என்றுதான் படுகிறது. ஏதேனும் அதிசயம் நிகழ்ந்துதான் அவள் மனசு மாற வேண்டும்.''

ரமா தன் மனக் கசப்பைக் காட்டிக் கொள்ளுவதற்காக ரங்கத்தின் காதில் படும்படி, ''மாமி! நான் கிளம்புகிறேன் ரங்கத்திடம் சொல்லிவிடுங்கள் அவளோடு நான் பேசப் போவதில்லை....'' என்று அறிவித்து விட்டுக் கிளம்பினான்.

விட்டான். அதற்குப் பிறகு அனந்தராமன் குனிந்த தலையை நிமிர்த்தவே இல்லை.

• • •

நாட்கள் ஓடிக் கொண்டிருக்க, இதற்கிடையே ரமா ரங்கத்தை அனந்தராமனின் சார்பில் அவ்வப்போது தொந்தரவு செய்து அவள் மனத்தை மாற்றத் தன்னாலானதைச் செய்து வந்தான். ஒரு கட்டத்தில், இனி ரமா அந்தப் பேச்சையே எடுக்கக் கூடாது என்றும், தான் ஏதேனும் மடத்தில் சேருவதற்குப் பெரிதும் விரும்பியிருப்பதாகவும், அது பற்றிய விதி முறைகளை விசாரித்துக் கொண்டிருப்பதாகவும் ரங்கம் திட்டவட்டமாக அறிவித்தாள். அதன் பிறகு கொஞ்ச நாட்களுக்கு ரமாவின் துணைப்பல் அடியோடு நின்று போயிற்று.

தன் வீட்டார் தன் திருமணத்துக்காகச் செய்து வரும் ஏற்பாடுகளையெல்லாம் அனந்தராமன் முறியடித்து வரும் செய்திகளும் அவ்வப்போது தற்செயலாக ரங்கத்தின் செவிகளில் விழுந்தன. அவளுக்கு வருத்தம் ஏற்பட்டாலும் அதற்காகத் தன் எண்ணங்களை மாற்றிக் கொள்ள மட்டும் அவள் முயலவே இல்லை. அது தனது முயற்சிகளுக்கு



''பாமா கல்யாணம் செய்துகொண்ட பிறகு தன் பெயரை பாமா கோபாலன் என்று மாற்றிக் கொண்டாள். லீலா தன் பெயரை லீலாராஜன் என்று வைத்துக் கொண்டாள். நான் அப்படி மாற்றினால், குழப்பம் இருக்கும்!''

''ஏன்?''

''என் பெயர் லக்ஷ்மி. அவரோட பெயர் லக்ஷ்மி நாராயணன்!''

- இரா. சுந்தையா



மறு நாள் தன் சந்திப்பும் தூண்டுதலும் தோல்வியில் முடிந்து விட்டதைப் பற்றி ரமா அனந்தராமனிடம் தெரிவித்துவிட்டான். அன்றிலிருந்து அனந்தராமனின் நடவடிக்கைகளில் பெரியமாறுதல்கள் தோன்றத் தொடங்கின. சிரிப்பு என்பதே அவனிடம் அதன் பிறகு தோன்றவில்லை. ஏற்கனவே அதிகம் பேசும் வழக்கம் இல்லாத அவனது கொஞ்சப் பேச்சும் அதன் பிறகு அறவே நின்று போனது. எப்போதும் ஏதோ தீவிரமாகச் சிந்திப்பது போன்ற முகத் தோற்றமும், ஏதோ பெரிய இடி விழுந்து விட்டாற் போன்ற துயரப் பார்வையும் அவனிடம் தோன்றிவிட்டன. காதலில் தோல்வியுறும் திரைப் படக் கதாநாயகன் ஒருவன் தோற்றத்தில் விளையும் மாறுதல்கள் அத்தனையும் அவனிடம் தோன்றின. அது மட்டுமல்ல; ரங்கம் கவனிக்காத நேரங்களில் அவளை அவன் பார்த்த பார்வையில் ஏக்கம் வெளிப்படையாகத் தெரியலாயிற்று. இதை ஒரு தரம் பார்த்துவிட்ட ரங்கத்துக்கு மனத்தை வேதனை செய்தாலும் மற்றவர்கள் ரசிக்கும் வண்ணம் அவன் அசட்டுத்தனத்துடன் நடந்து கொள்வதாக அவளுக்கு எரிச்சலும் வந்தது. ஒரு முறை ஏக்கம் நிறைந்த அவனது பார்வையைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்தபோது அந்த எரிச்சலை அவள் முகத்தில் காட்டிக்கொண்டு

அப்பாற்பட்ட ஒன்று என்பது அவள் உள் மனத்துக்குத் தெரிந்திருந்தது. எனவே அவனுக்காக வருத்தப்படுவதையும் அவன் மனம் மாறி ஒரு நல்ல பெண்ணை மணந்துகொண்டு மகிழ்ச்சியாக வாழ வேண்டும் என்று அடிக்கடி வேண்டிக் கொள்வதையும் தவிர அவள் செய்யக் கூடியது வேறு எதுவாகவும் இல்லை.

அவளது விருப்பம் பற்றி ரமாவின் வாயிலாக அவன் அறிய நேர்ந்ததற்குப் பிறகு மூன்று ஆண்டுகள் கழிந்து விட்டன. அனந்தராமனுக்கும் முப்பது, முப்பத்தொன்று, முப்பத்திரண்டு என்று வயசு ஏறலாயிற்று. அவனது துன்பத்தைத் தாங்க மாட்டாமல் ரங்கம் அவனுக்குக் கடிதம் எழுத முற்பட்டாள். தன் மனம் திருமணத்தைத் துளியும் நாடவேயில்லை என்பதையும், துறவு மனப்பான்மையே தன் உள்ளம் முழுவதும் பரவியிருப்பது பற்றியும் மற்றபடி அவன் மீது தனக்கு வேறு எந்தவகையிலும் பிடித்தமின்மை என்பது கடுகளவும் இல்லை என்பதையும் தெரிவித்து அவனது நிலை தனக்கு வருத்தமளிப்பதால் அவன் விரைவில் யாரையாவது மணந்து கொண்டு தன்னை மனச் சுமையிலிருந்து விடுவிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டு அவனுக்கு ஒரு கடிதத்தை எழுதி அஞ்சலில் சேர்த்தாள். தான் செய்திருப்பதை ரமாவிடமும் கூறினாள். அவன் மீது அவளுக்கு விளைந்துள்ள

கருணை காதலாக மலரக் கூடிய சாத்தியக் கூற்றை எண்ணி ரமா நம்பிக்கையுடன் சிரித்துக் கொண்டாள்.

அனந்தராமன் பதில் எழுதினான். அவனது துறவு மனப் போக்கு எவ்வளவு உண்மையானதோ, அவ்வளவு உண்மையானது தனது காதலும் என்று அவன் தெரிவித்தான். அவனால் தன் மனத்தை மாற்றிக் கொள்ள முடியாதது போல் தன்னால் தன் மனத்தையும் மாற்றிக் கொள்ள முடியாது என்று அறிவித்தான். தனது நிலைக்காக அவள் வருந்த வேண்டியதே இல்லை என்றும் கூறினான். தன்னோடு பேசுவதைக் கூட அவள் தவிர்க்கும் அளவுக்குத் தான் பொல்லாதவனா, அவளுக்குப் பிடிக்காத வகையில் அடிகளை எடுத்து வைப்பவனா அல்லன் என்றும் தெரிவித்தான். காதலியாக இருக்க முடியாவிட்டால் குறைந்தபட்சம் தோழியாகவாவது இருக்கலாமே என்றும் கேட்டான்.

ரங்கம் மறுபடியும் அவனுக்கு எழுதினாள். தான் அவனை ஏறெடுத்தும் பாராமல் இருக்கும்போதே தன்னை இத்தனை அவஸ்தைகளுக்கு உட்படுத்திக் கொள்ளும் அவன் தான் அவனுடன் நட்புறவோடு சிரித்து வேறு பேசத் தொடங்கினால் அது அவனது நிலையை மேலும் பாதிக்கும் என்றும் நம்பிக்கைகளை வளர்க்கும் என்றும் அவளது முழுமையான புறக்கணிப்பால் அவன் மனம் மாறி வேறொரு பெண்ணை மணக்க ஏற்படக் கூடிய சாத்தியக் கூற்றை அது அடியோடு பாழ்படுத்திவிடும் என்றும் அதனால் வழக்கம் போலவே இருக்குமாறும் அவள் எழுதினாள். இப்படி அவள் எழுதியதற்குப் பிறகு அனந்தராமன் மேலும் இடிந்தவன் போலானான்.

அவனது மேலும் சீர்குலைந்த நிலை ரங்கத்தையும் பாதிக்கத் தொடங்கிற்று. ஒரு பார்வையாலோ, பேச்சாலோ, சிரிப்பாலோ அவனது காதலைத் தூண்டும் வகையில் தான் நடந்து கொண்டதே இல்லை என்ற நிலையிலும் கூட அவனது துயரத்துக்குத் தான் காரணமாக அமைந்து விட்டது அவளை ஓர் உறுத்தலில் ஆழ்த்தியது. அப்படி ஓர் உறுத்தல் தேவையே யில்லை என்பது புரிந்தும் அவள் மனத்தால் அந்த உணர்ச்சியை வெற்றி கொள்ள இயலவில்லை.

இதனால் ரங்கமும் இளைத்துப் போகத் தொடங்கினாள். யாருக்கோ தீங்கு செய்து விட்டது போன்ற மன வருத்தம் அவளை அலைக்கழிக்கலாயிற்று. சரியான தூக்கம் இல்லாது போயிற்று. திடீர் திடீரென்று பாதித் தூக்கத்தில் விழித்துக் கொள்வாள். அப்படி விழித்துக் கொண்ட போதெல்லாம் அனந்தராமனின் கெஞ்சுகின்ற பார்வை அவள் கற்பனையில் தோன்றி மீதித் தூக்கத்தை வெகு நேரத்துக்குக் கெடுக்கும். இதனால் அவள் தன்னைத் தானே சோதித்துப் பார்த்துக் கொண்டாள். என்ன சோதித்துப் பார்த்தும் அடி மனத்தில் அனந்தராமனின் மீது தனக்குத் துளியும் காதல் இல்லை என்பதாகவும், அது யார் மீதும் ஏற்படவே ஏற்படாது என்பதையும் அவள் தெளிவாக உணர்ந்தாள். அவனது மனநிலை தன்னைப் பாதித்து வருவதை அறிந்தாள்.




தனது வருத்தம் பற்றி அவள் ரமாவிடம் மனம் விட்டுப் பேசினாள். "ரமா! அச்சு. நீ அவனைப் பற்றி என்னிடம் சொன்னதற்குப் பிறகு ஐந்து வருஷங்கள் ஆகிவிட்டன. என்ன முயன்றும் என் மனத்தை மாற்றிக் கொள்ளவே முடியவில்லை. அனந்தராமன் இப்படி இருப்பது என் உடல் நிலையையும் மனநிலையையும் மிகவும் பாதிக்கிறது. நான் மிகவும் இளைத்துப் போய் விட்டதாக வருத்தப்பட்டாயே, அதற்குக் காரணம் அவன் தான். அவன் யாரையாவது கல்யாணம் செய்து கொண்டால்தான் என் மனம் சமாதானம் அடையும். அதற்கு நீ முயற்சி செய், ரமா. நான் உயிரோடு இருக்கிற வரையில் அவன் வேறு யாரையும் நினைக்க மாட்டான் என்றால், நான் தற்கொலை செய்து கொள்வேன்! அதை அவனிடம் சொல்லு. காதலுக்கு அடையாளம் என்ன தெரியுமா? காதலனும் காதலியும் ஒருவர் மகிழ்ச்சிக்காக ஒருவர் எதையும் விட்டுக் கொடுக்கத் தயாராக இருப்பதுதான். அவனுக்கு நிஜமாகவே என்மேல் அன்பிருந்தால் இப்படி அவன் என்னை வதைக்க மாட்டான். இதை அவனிடம் அப்படியே சொல்லு. இல்லாவிட்டால் நானே எழுதட்டுமா?"

ரமா, "ரங்கம்! நீயே எழுதிக்கொள். நான் இனிமேல் இதில் மாட்டிக் கொள்ள மாட்டேன். ஆனால் அவனைப் புண்படுத்தாமல் எழுது" என்றாள்.

ரங்கம் எழுதினாள்.

இந்தக் கடிதம் கையில் கிடைத்த அன்றே அனந்தராமன் ரமாவைத் தனியாகச் சந்தித்துப் பேசினான். "மேடம்! ரங்கம் எனக்குக் கடிதாக எழுதியிருக்கிறாள்" என்று கூறி அதைக் காட்டிவிட்டு, "ரங்கம் சொல்லியிருப்பது உண்மைதான். உண்மையான பிரியத்துக்கு அடையாளம் எதிராளியின் மகிழ்ச்சிக்காக விட்டுக் கொடுப்பதுதான் என்று ரங்கம் எழுதியிருப்பது முழுக்க முழுக்க உண்மை. அதைச் செய்வது என்று நான் தீர்மானித்து விட்டேன், மேடம்! ரங்கத்தின் உடம்பு கொஞ்ச நாட்களாகச் சரியாக இல்லை தான். அதற்கு நானே காரணம் என்பது தெரியாது. ஐம் ஸோ ஸாரி! என்னை மன்னித்துவிடச் சொல்லுங்கள்" என்றான்.

தலையைக் குனிந்து கொண்டும் முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டும் மெதுவாக நடந்து போன அவனது முதுகைப் பார்த்து ரமா வேதனையுடன் பெருமூச்செறிந்தாள்.



# கடுகு பதில்கள்!

**⌘ பி. கோவிந்தராஜ், ஆடுதுறை**

கே: தெய்வத்தின் அருளைப்பற்றிச் சோதனை செய்தது உண்டா, பலன் அடைந்தது உண்டா?

ப: சோதனை செய்ததில்லை ஆனால் எத்தனை எத்தனையோ தடவை பலன் அடைந்ததுண்டு. ஒரு புத்தகம் எழுதும் அளவுக்கு அனுபவங்கள் உண்டு. ஆண்டவனின் அன்புக் கரங்களைப் பல பல சமயங்களில் கண்டிருக்கிறேன். சின்னதும் பெரிதுமான எத்தனை உதவிகள்!

**⌘ ஜி. புவனா, ராணிப்பேட்டை**

கே: நீங்கள் 'விக்' வைத்துக் கொள்ளலாமே?

ப: 'விக்' என்ன விலை 'விக்'கிறது என்பது தெரிந்தால் இப்படிச் சொல்ல மாட்டீர்கள்!

**⌘ எஸ். சந்திரமௌளி, சென்னை-10**

கே: நீங்களாவது சுதாகருக்கு உம் திருவாயால் ஒரு பட்டம் அளியுங்களேன்.

ப: அவரை விரோதித்துக் கொள்ள மாட்டேன்!

**⌘ மதனகோபாலன், சென்னை-32**

கே: சிலபடங்கள் சென்னையில் ஒரு மாதிரி முடிவுடனும், வெளியூர்களில் வேறு மாதிரி முடிவுடனும் காட்டப்படுவது ஏன்?

ப: பத்திரிகை விமர்சகர்கள் என்ற ஆட்கொல்லிகளைத் திருப்திப்படுத்தும் வகையில் சென்னை நகர பட பிரதிகளையும், பணம் கொடுத்துப் படம் பார்க்கும் ரசிகர்களைத் திருப்திப்படுத்தும் வகையில் வெளியூர்ப்" பிரதிகளையும் அமைக்கிறார்கள் போலும்!

**⌘ சக்தி குணசேகரன், வேலூர்-4**

கே: ஷேக்ஸ்பியர் தமிழ் நாட்டிலும் திருவள்ளுவர் மேல் நாட்டிலும் பிறந்து இருந்தால்?

ப: ஷேக்ஸ்பியருக்குத் திருவள்ளுவர் என்று பெயர் வைத்திருப்பார்கள். வள்ளுவருக்கு மேல் நாட்டில் ஷேக்ஸ்பியர் என்று பெயர் வைத்திருப்பார்கள்!

**⌘ ஆர். நிலா, புகளூர்**

கே: பணத்தைக் கண்டு சிலர் குழைகிறார்களே?

ப: பணம் எதையும் 'மசிய'ச் செய்துவிடும் என்பது தெரியாதா?

**⌘ சில்பி சீனிவாசன், திருக்குறுங்குடி**

கே: மனசாட்சி இருந்தும் மனிதன் தடுமாறுவது ஏன்?



ப: மனச்சாட்சி இருப்பதால்தான் தடுமாற்றம். இல்லாவிட்டால் ஒரு தடுமாற்றமோ, தயக்கமோ இன்றி சர்வ சுதந்திரமாகத் தவறுகளைச் செய்து கொண்டு இருப்பான்!

**⌘ சசி ராமநாதன், சென்னை-90**

கே: டைரக்டர் லக்ஷ்மியா? இயக்குனர் லக்ஷ்மியா?

ப: உங்கள் கேள்வி எனக்குப் புரியவில்லை. யார் சிறந்தவர் என்று கேட்பதாக வைத்துக்கொண்டு பதில் சொல்கிறேன் பாலசந்தர் மேற்பார்வை என்று இல்லாதிருந்தால் 'மழலைப் பட்டாளத்தின் சிறப்பு அம்சங்களுக்கு ஒட்டு மொத்தமாக லக்ஷ்மிக்குப் பாராட்டுத் தர முடியும். பாலசந்தரின் ஐடியாவோ என்று எண்ணி லக்ஷ்மிக்கு உரிய ஷொட்டைக் கொடுக்கத் தயக்கம் ஏற்படுகிறது 'அவன் — அவள்— அது'வில் இந்தச் சங்கடம் இல்லை லக்ஷ்மி ஒஹோ என்று செய்து இருக்கிறார். விகவின் வசனமும் கை கொடுக்கிறது.

**⌘ பி. ஆர். கீதா, ஊரூர்**

கே: கண்ணதாசன் கவிதைக்கும் கருணாநிதி கவிதைக்கும் வேறுபாடு என்ன?

ப: கவியரசு இதயத்தைத் தொடுவார்; கலைஞர் மூளையைத் தொடுவார்.

**⌘ நரேந்திரகுமார், பாரக்பூர்**

கே: கேள்வி-பதில் சொல்பவர்களில் முதல் இடத்தைப் பிடிக்கப் பார்க்கறீங்களா?

ப: இல்லை. இரண்டாவது இடம் கிடைத்தால் போதும். முதல் இடத்துக்குத்தான் நிறையப் போட்டிகள் உள்ளன.

பரிசு பெறுபவர்:

**சில்பி சீனிவாசன்**
**6. வடக்கு மாடத்தெரு**
**திருக்குறுங்குடி-627 115**

சில நாட்களுக்கு முன் வெளியான பத்திரிகை செய்தி :—

தம்பதியை வழி மறித்து நான்கு கயவர்கள் மனைவியை மட்டும் இழுத்துச் சென்று அவமான பங்கப் படுத்தி அனுப்பி விட்டனர். வீடு திரும்பிய அவள் அவமானத்தில் தற்கொலை செய்து கொண்டாள்.

இச்செய்தி பின்னால் மறுக்கப்பட்டது.

ஆனால் —

இதில் ஒரு கதை 'கரு' நமக்கு அகப்படுகிறது.

சென்ற வாரம் இச்செய்தி அளித்த கருவை மையமாய் வைத்துக் கதையை முடித்துத் தந்தார் திரைக்கதை வசனகர்த்தா காரைக்குடி நாராயணன்.

இந்த வாரம் திரைக்கதை வசனகர்த்தா எஸ். ஜெகதீசன் அதே செய்திக் கருவை மையமாக்கிச் சிந்தனையை ஓடவிட்டு கதை முற்றிலும் புதிதான வேறு கோணத்தில் வளர்ந்து முடிந்து நம்மை அதிசயத்தில் ஆழ்த்துகிறது!

தொகுத்தளிப்பவர்: அன்பு

கல்யாணில் இருந்து புறப்பட்டுத் தாதர் நோக்கிச் செல்லும் மின்சார ரயில் நிறைமாதக் கர்ப்பிணியாகத் தன்னுள் பாசஞ்சர்களை அடக்கிக் கொண்டு மூச்சுத் திணறியபடி ஓடிக் கொண்டிருக்கிறது

முகத்தோடு முகம் உராயும் அளவுக்கு— நெருக்கி நிற்கும் பயணிகள்மத்தியிலே முரட்டு மீசையும் கறுப்புக் கண்ணாடியுமாக மதுரை வீரனின் மறுபதிப்பு போல் மப்டியில் நிற்கிறார் இன்ஸ்பெக்டர் அகூஜா.

நரியைக் குணத்திலும் கழுகைக் கண்ணிலும் கொண்ட அவருடைய பார்வை அந்தப் பயணிகள் பெட்டியில் எக்ஸ்ரேயாகப் பாய்ந்து துழாவிக் கொண்டிருக்கிறது.

தேடியது கிட்டாமல் போன களைப்பு அவர் முகத்தில் படருகிறது. இதற்குள் வண்டி மாதுங்கா செண்ட்ரல் ஸ்டேஷனில் வந்து நிற்கிறது.

பயணிகள் வெளியே வழிகிறார்கள். அவர்களோடு இன்ஸ்பெக்டர் அகூஜாவும் வழிந்து வெளியே வருகிறார்.

மாதுங்கா விநாயகர் கோவில் அருகே ஸ்டாண்டில் நிறுத்தியுள்ள புல்லட் அவரைச் சுமந்து கொண்டு எஸ்.என். ரோட் வழியே கிங் சர்க்கிள் நோக்கிப் பறக்கிறது. அவருடைய எண்ணங்களோ பல நாட்கள் பின் நோக்கிப் பறக்கிறது.

பம்பாயையே கதிகலங்க வைத்த அந்தக் கோர நிகழ்ச்சி சம்பந்தமாகத் துப்பு துலக்க அழைக்கப் பட்டிருக்கிறார் அகூஜா.

போலீஸ் அதிகாரி கோட்வாங்கர் குற்ற உணர்வோடு குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருக்கிறார்.

பலர் குத்திக் காட்டிக் குறைபட்டுப் பேசும் இந்தக் கொலை, காவல் துறையின் மீது பூசப்பட்ட கறையாகி விட்டதை எண்ணிப் புழுங்குகிறார் கோட்வாங்கர்.

அவர், அவருடைய நம்பிக்கைக்குரியவரான அகூஜாவை அழைத்துக் குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்த போது, அகூஜாவுக்கு அது ஒரு கடுமையான பணியாகத் தெரியவில்லை. நாட்கள் செல்லச் செல்லத்தான் தான் மேற்கொண்டிருக்கும் கடமை மிகவும் கடுமையானது என்று அவருக்குப் புரிய ஆரம்பித்தது.

குற்றவாளிகள் மாநில எல்லையைக் கடந்து போய் விடாதபடி எல்லா முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் அனைத்தையும் செய்து விட்டார். ஒரு சிறு தடயம் கூட கிடைக்கவில்லை.

இதை எல்லாம் சிந்தித்துக் குழம்பியபடி, புல்லட்டை ஓட்டி வந்த அகூஜா, அவருடைய ''பேவரைட்'' பான் பீடாவுக்காகக் கிங் சர்க்கிளில் வண்டியை நிறுத்தினார்.

அந்தப் புல்லட்டை முத்தமிடுவதைப் போல் வந்து நின்றது ஒரு ராஜ்தூத். அதிலிருந்து இறங்கிய மற்றொரு இன்ஸ்பெக்டரான சௌத்திரி அகூஜாவின் தோள் மீது கையைப் போட்...

...டபடி, அவருடைய கன்டு



பிடிப்பு பற்றி விசாரிக்கிறார். காட்கோபரில் ஒரு கன்ஸ்ட்ரக்ஷன் இன்ஜினீயர் கார் காணாமல் போய் விட்டது என்றும், அந்தக் கார் செம்பூர் அருகே உள்ள ஒரு காலனியில் கைவிடப்பட்டுக் கிடந்ததைக் கண்டு போய்ச் சேர்த்து விட்டு வருவதாகவும் கூறுகிறார் சௌத்திரி.

''பானை'' வாய்க்குள் திணிக்கப் போன அகூஜாவின் மூளைக்குள் ஒரு மின்னல் பொறி பறந்தது. காரைத் திருட்டுக் கொடுத்த இன்ஜினீயரின் விலாசத்தைத் தெரிந்து கொண்டு புல்லட்டில் பறக்கிறார் அகூஜா.

காட்கோபரில் இன்ஜினீயர் வீட்டை அவர் அடைந்த போது போர்டிகோவில் கார் இல்லை. இன்ஜினீயர் மட்டும் புல்வெளியில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்தார்.

அவர் தம் கார் காணாமற் போன நாளையும் பாந்திராவில் தான் சினிமா பார்க்கச் சென்றிருந்த போது தியேட்டர் வாசலில் நிறுத்தப்

பிராங்பர்ட்டில் நடந்த உலகப் பொருட் காட்சியில் இரண்டுபேர் ஒரே நேரத்தில் புகைக்கக் கூடிய 'பைப்' ஒன்று காட்சிக்கு வைக்கப் பட்டிருந்தது. இந்த விநோதை கண்டு பிடிப்பைப் பற்றி இதன் கண்டு பிடிப்பாளர் சொன்னார்: இதில் தமாஷாக புகை பிடிக்கலாம். ஆனால் தொடர்ந்து புகை பிடிப்பதைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு இது உதவாது!''

- ஜீவா தனசேகரன்



பட்டிருந்த போது அது களவு போனதையும் கூறுகிறார். அந்த வண்டியைச் சுத்தம் செய்ய மெக்கானிக் ஷாப்புக்கு அனுப்பி இருப்பதாகவும் கூறுகிறார்.

அகூஜாவின் புல்லட் மெக்கானிக் ஷாப்புக்குள் வந்து நிற்கிறது.

அகூஜா, இன்ஜினீயரின் காரை அலச ஆரம்பிக்கிறார். உள்ளே சீட் அருகே கசங்கிக் கிடக்கும் ஒரு காகிதச் சுக்கல். அது ஒரு பெட்ரோல் பில். சயானில் ஒரு பெட்ரோல் பங்க்கில் பெட்ரோல் போட்ட பில். ''டாங்க் புல்'' செய்யப்பட்டிருக்கிறது.

அடுத்த அரை மணி நேரத்தில் அவருடைய விசாரணை பெட்ரோல் பங்க்கில் நடக்கிறது. நைட் டியூட்டி பையன் விசாரிக்கப்படுகிறான்.

நான்கு பேர் அந்தக் காரில் வந்ததாகவும், பெட்ரோல் நிரப்பிக் கொண்டிருந்த பொழுது அவர்கள் பேச்சிலிருந்து அவர்கள் ரேசுக்குப் போய் வந்ததைப் பற்றி அறிந்ததாகவும் பையன் கூறுகிறான்.

மகாலட்சுமியில் ரேஸ் மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது. கார்கள் நிறுத்தப் பகுதியில் உள்ள பார்க்கிங் கிளார்க்கிடம் விசாரிக்கிறார் அகூஜா.

அவர் ரெஜிஸ்தரை செக்கப் செய்து விட்டு: அந்தக் குறிப்பிட்ட நம்பர் கார் ரேசுக்கு வந்ததையும் அந்த நாளையும் கூறுகிறார்.

ரேஸ் முடிந்து வெளியே செல்லும் கூட்டத்திடையே அந்த நால்வரையும் அடையாளம் காட்டுகிறார் பார்க்கிங் கிளார்க்.

அகூஜாவின் கண்கள் அகல விரிகின்றன. அந்த நால்வரில் மூன்று பேர் நகரிலுள்ள பெரும் புள்ளிகளின் பிள்ளைகள். அவர்களைப் பல விசேஷங்களில் அவர்களுடைய தந்தையரோடு பார்த்திருக்கிறார் அகூஜா.

அவர்களைப் போதுமான ஆதாரங்களின்றி நெருங்க முடியாது! ஆனால் அந்த நாலாவது ஆள், அனிதாவிடம் தொடர்புள்ளவன்.

அனிதா போலீஸ் லிஸ்டில் பதிவாகியுள்ள ஒரு ''சொபிஸ்டிகேடட்'' சிவப்பு விளக்குப் பெண்மணி. திடுமெனத் தன் வீட்டு வாசலில் வந்து நிற்கும் அகூஜாவைக் கண்டதும் சற்றுத் திடுக்கிடுகிறாள் அனிதா.

அவருடைய போலீஸ் மூளை சுறுசுறுப்படைகிறது. ஊரையே கலக்கிக் கொண்டிருக்கும் கற்பழிப்பு சம்பவத்தில் சம்பந்தப்பட்ட நால்வரும் பிடிபட்டு விட்டதாகவும், அந்த நால்வரில் ஒருவன் கொடுத்த தகவலின் மூலம் அவளுக்கும் அதில் சம்பந்தம் இருப்பது வெளியாகியிருக்கிறதுஎன்றும்ஒரு கற்பனைவெடியை வீசவே அவள் நிலைகுலைந்து போகிறாள்.

அதற்குப் பிறகு அவளை அப்ரூவராக்குவதாகச் சொல்லி, அவள் வாயிலிருந்து சில விவரங்களை வரவழைக்கிறார்!

''குறிப்பிட்ட நாள் இரவு அந்த நால்வரும் அந்தக் குடும்பப் பெண்ணைக் கடத்தி வந்தார்கள், இரவு முழுவதும் அங்கே தங்க இடம் தர வேண்டும் என்று கத்தி முனையில் என்னை மிரட்டினார்கள். வேறு வழியின்றி ஒப்புக் கொண்டேன். இரவு முழுவதும் அவளோடு இருந்த அவர்கள் காலையில் அவளை அழைத்துச் சென்று விட்டார்கள்.''

அவளுடைய வாக்குமூலம் மற்ற தடயங்கள் அனைத்தையும் அசுர வேகத்தில் திரட்டிக் கொள்கிறார் அகூஜா. தலைமைப் போலீஸ் அதிகாரி கோட்வாங்கரிடம் விரைகிறார்.

குற்றவாளிகளைக் கண்டு பிடித்ததை அளக்கிறார் அகூஜா.

அதிகாரி கோட்வாங்கர் அமைதியாக ஒரு பத்திரிகையை எடுத்து அகூஜாவின் முன் போடுகிறார். அதில், ''பம்பாயில் நடந்ததாகக் கூறப்பட்ட சம்பவம் ஒரு கற்பனையே தவிர, அப்படி ஒரு சம்பவமே நடக்கவில்லை என்பது விசாரணையின் மூலம் தெரிய வருகிறது'' என அரசாங்கப் பத்திரிகைக் குறிப்பு வெளியாகி இருக்கிறது.

சிலை போல் நிற்கிறார் அகூஜா. அவர்தம் தலையில் இருக்கும் தொப்பியையும், தோளில் இருக்கும் பட்டையையும் கழற்றி மேஜைமேல் வைக்கிறார்.

அதிகாரத்துக்குட்பட்டுச் செயலாற்றி வந்த அகூஜா, ''ஆர்டினரி சிட்டிச''னாக வெளியேறுகிறார். அவர் வேலியாக இருந்து பழக்கப்பட்டவர். கள்ளிக்கு எதற்கு முள்வேலி?

# ஹரி ஓம்

[சுவாமி சின்மயானந்தாவுடன் பேட்டி— 15-6-80 இதழ் தொடர்ச்சி]

**கேள்வி:** பொது மேடைகளிலும், பத்திரிகைகளிலும் ஒன்றுக்கொன்று முரண்பாடான விஷயங்கள் பேச, எழுதப்படுகின்றன. ஆஸ்திக, நாஸ்திகப் பிரசாரங்கள் இரண்டையுமே சாதாரணப் பாமரன் கேட்க வேண்டியுள்ளது. தரமறிந்து உண்மையை உணர்ந்து கொள்ள வழியுண்டா?

**ஸ்வாமிஜி:** சாஸ்திர நெறி முறைகளைப் பற்றிய அறிவைப் பிரசார ஆர்வத்துடன் பரப்புவது ஒன்றுதான் வழி. ஒவ்வொருவருக்கும் தம்முடைய கருத்தை எடுத்துச் சொல்ல உரிமை உண்டு. கடவுள் உண்டு என்றோ, இல்லை என்றோ யாரும் வார்த்தைகளால் நிரூபித்து விட முடியாது. கடவுளிடம் நம்பிக்கை வைக்கும்போதுதான் வாழ்க்கையிலும் நம்பிக்கை ஏற்படும். உங்களைச் சுற்றியுள்ள உலகமும் மிகவும் பயனுள்ளதாய் இருக்கும். இதை நீங்கள் நன்கு புரிந்து கொள்ள வேண்டும். வாழ்க்கையை மதித்துப் போற்றி, மேலும் மேலும் மற்றவர்களுக்குப் பயனுள்ளவர்களாகவும் அன்புடையவர்களாகவும் வாழ வேண்டுமென்றே எல்லாச் சமயங்களும் எடுத்துச் சொல்கின்றன. கடவுள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, ஆள்வோருக்கும், ஆளப்படுவோருக்கும் தலைமை ஏற்று நடத்து கிறவனுக்கும், அவன் வழியில் நடப்பவனுக்கும் சிறப்பான சமுதாய ஒழுக்க முறை இருக்க வேண்டும் என்பதை அறிவுத் திறன் அற்றவன் கூடப் புரிந்து கொள்வான்.

புனிதமான வாழ்க்கையை வாழ நாம் முற்படுகிறபோதுதான் அதற்கான ''தர உயர்வு'' பற்றிய அவசியம் ஏற்படுகிறது. நம்முடைய நல்ல பண்புகளைத் தனிமைப் படுத்திக் காட்ட அது அவசியமாய்த் தேவைப் படுகிறது. இந்தத் தர உயர்வே கடவுள் என்று கொள்ளலாம்.

**கேள்வி:** கடவுள், மத நம்பிக்கைகளைப் பரப்புவதற்காகச் சிலர் 'மாஜிக்' போன்ற அபூர்வ சக்தி முறைகளைப் பயன்படுத்திப் பொருள்களை வரவழைத்துத் தருவதுபற்றி...

**ஸ்வாமிஜி:** 'வெறும் கையில் விபூதி வரவழைப்பது என்பது ஒரு கவர்ச்சியான செயல் விளக்கம்தான். கூடியிருப்பவர்கள் புரிந்து கொள்வதற்கு அப்பாற்பட்ட ஒரு விஷயம். அனேகர் ஒரு புதிய முறை என்று இதைத் தொடங்கி விட்டார்கள். நம் நாட்டில் இப்படிப்பட்ட அற்புதங்களைச் செய்பவர்கள் மூன்று டஜன் பேர்களாவது இருப்பார்கள். அற்புதங்கள் எந்த ஒரு விஷயத்தையும் நிரூபிப்பதற்காக இல்லை. ஆனால் அதைக் கண்டு அதிசயிக்கவும், பேசவும், ஆராயவும் வழியமைக்கிற ஒரு புதிய பரிமாணம்தான் அது. அதன் மூலம் அற்புதங்களை நடத்துகிறவர்களின் திறமைகளை வெளிக்காட்ட முடிகிறது.

**கேள்வி:** மேலை நாடுகளில் பிரபலமடைந்து வரும் சில இந்து மத அமைப்புக்கள் என்று சொல்லிக் கொள்பவை பால் உணர்ச்சி நடவடிக்கைகள் மூலம்தான் தெய்வத்தை அடைய முடியும் என்பது போல் பிரசாரம்



செய்கின்றன. 'தாந்த்ரிக் கல்ட்' என்று எதையோ சொல்கிறார்கள். உண்மையில் இந்து மதம் இதை ஒப்புக்கொள்கிறதா?

**ஸ்வாமிஜி:** இடைக்காலத்தில் ஏற்பட்ட 'தாந்த்ரிக் கல்ட்' என்கிற முறை இது. விரைவிலேயே இது ஒழுக்கத்துக்கு ஊறு விளைவிக்கும் என்று அறிந்து கொண்ட நம்முடைய சமுதாயம் இம்முறையை நிராகரித்தது. இதைப் பின்பற்றியவர்களை ஏறக்குறைய சமுதாயத்திலிருந்தே பிரஷ்டம் செய்து விட்டது. உலகம் முழுமையிலும் உள்ள நம்முடைய தற்போதைய நாகரிகத்தில் சுதந்திரமான பால் உணர்வு முறைகளைப் பின்பற்றும் கூட்டத்தில் சரிவரப் புரிந்து கொள்ளப்படாத 'தந்த்ரிக்கல்ட்' தன்னுடைய விஷப் பற்களைப் பதிக்கச் சாதகமான சூழல் ஏற்பட்டு விட்டது. ஏற்கெனவே ஒழுக்கம் சிதைந்து போன சமுதாயத்தில் இது ஒன்றும் ஆன்மீக மேம்பாட்டை உண்டாக்க உதவப் போவதில்லை. வெறுமனே ஈடுபடுவது மட்டும் முக்கிய விஷயமில்லை. பயங்கரம், அச்சம், பாலுணர்வு, அதன் கவர்ச்சி இவற்றால் மிகுதியாகத் தூண்டப்படும் சூழ்நிலையில் அறிவுத் திறனையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அதற்கான மனவளம் வேண்டும். இது மிகவும் அபாயகரமானதும் தீமைபயப்பதுமான முறை. நவீன காலத்தில் பின்பற்றுவது புத்திசாலித்தனமானதல்ல... அவர்கள் பின்பற்றும் சில முறைகள் அபாய கரமானவை என்று கண்டு அவை தடைசெய்யப்பட்டும் விட்டன. இம்முறை நீண்ட காலமாகவே ஆதரவளிக்கப்படாமல் இருந்து வந்தது.

மீண்டும் அது இப்போது தலையைத் தூக்குகிறது. இதனால் சமுதாயத்துக்குத் தனியான புதிய கெடுதல் ஒன்றும் இல்லையென்றே நான் கருதுகிறேன். ஏனெனில் 'தந்திரிக்' முறை என்னும் மகுடம் இல்லாமலே புலனுணர்வுக் களியாட்டங்களில் ஈடுபடக் கூடியவர்கள்தான் இப்போது இதைப் பின்பற்றுகிறவர்கள்.

பேட்டி : சுப்ரபாலன்

படம் : உத்ரா



# தரகர்

கருத்து : வெ. சீதாராமன்
படம் : செல்லப்பன்



ஒருவர் : பையன் உட்கார்ந்த இடத்திலேயே வேலை செய்யாம சம்பாதிக்கிறானே? எப்படி?
தரகர் : பென்ஷன் வருது!



வாலிபன் : இந்தாங்க என் போட்டோ, ஜாதகம்! வரதட்சிணையே எனக்கு வேணாம்.
தணிகாசலம் : வரதட்சிணையே வேணாமா? சந்தேகமா இருக்கே! எதுக்கும் இதுகூட ஒரு ''மெடிகல் பிட்னஸ்'' சர்டிபிகேட் அட்டாச் பண்ணிக் கொடுங்க.





தரகர் : இந்தக் குடும்பத்திலே எனக்கு ஒரு ''போனஸ் ஆஃபர்''!
ஒருவர் : எப்படி?
தரகர் : முதல் நாலு பையன்களுக்கு அவங்க கேக்கற வரதட்சிணையை பெண் முழுசாக் கொடுத்தா, அஞ்சாவது பையனோட வரதட்சிணை எனக்கு பீஸாம்.



தரகர் : (ஒரு வாலிபனிடம் போட்டோவைக் கொடுத்து) கோவிச்சுக்காதீங்க. அந்தப் பொண்ணுக்கு விளையாட்டுப் புத்தி. அதான் உங்க போட்டோவுக்குத் தாடி மீசை போட்டுத் திருப்பிக் கொடுத்திருக்கு!





ஒருவர்: என் பையனுக்கு ஒரு பெண் பாருங்க! பொண்ணு 'கிளி' மாதிரி இருக்கணுமாம்.

தரகர்: பய என்ன, அவகிட்டே ஜோசியமா கேக்கப் போறான்!

தரகர்: ஏண்டாப்பா நேத்து வரன் பாக்கப் போனோமே! எப்படி?

பையன்: பிடிச்சிருக்கு. ஆனா ஒரே ஒரு குறை! சொல்லுங்க பார்ப்போம்.

தரகர்: என்ன? பஜ்ஜில உப்பு குறை அது தானே!

# தணிகாசலம்



ஒருவர்: ஏன் இந்தத் தெருவழியா போக வேணுங்கிறே!

தரகர் தணிகாசலம்: நான் முடிச்சி வெச்ச நாலஞ்சு தம்பதியர் இந்தத் தெருவிலதான் குடி இருக்காங்க!

தணிகாசலம்: என்னோட திறமை, முயற்சி சவடால் எல்லாத்துக்கும் சவால் கொடுக்கறது இந்தப் பெண் தான்! பத்து வருஷமா வரனே கிடைக்கலே!

ஒருவர்: யார் வீட்டுப் பெண்?

தணிகாசலம்: என் மூத்த பெண்தான்!





## அத்தியாயம் 48

# பெண் எனும் சுழல்

பெண் சம்பந்தப்படும் போது எப்பேர்ப்பட்ட அறிவாளியான ஆண்மகனும் அடி முட்டாளாகிறான் என்ற டெய்லரின் கருத்துக்கு சான்று கூட்டுபவன் போல் அன்று முழுவதும் அனந்த் நடந்து கொண்டான். மலைப் பாறையில் படுத்துப் பேசி கனேஜுக்கு அனுப்ப வேண்டிய முத்திரைக் கடிதத்தை அறைக்குள் சென்றதும் ராணியிடம் கொடுத்த பிறகு, முன்னைவிடக் கேவலமான இழி தொழில்களில் ஈடுபட்டான் இந்திரஜித். ராணியின் அந்தப் பிரத்தியேக அறையில் முதல் நாள் படுத்து ராணியால் வெளியே துரத்தப்பட்ட அந்த மஹாராஷ்டிர வீரன், இன்று அந்த அறையிலிருந்து வெளியே வர நீண்ட நேரம் பிடித்ததை டெலஸ்கோப்பின் மூலம் கவனித்த டெய்லர் மேலும் பலமாக நகைத்து ''தட் பெலோ வில் நெவர் கம் அவுட் ஆப் தட் ரூம் (அவன் அந்த அறையை விட்டு வெளியே வரவே மாட்டான்)'' என்றும் கூறினான்.

அவன் அருகில் நின்றிருந்த வில்வர் மீண்டும் அவனிடமிருந்து டெலஸ்கோப்பை வாங்கி அறை மீது பார்வையை நிலைக்க விட்டான். அறைக்கதவு மூடிக் கிடந்தது. அதனால் வெருண்ட முகத்துடன் ''வெளியே வராமல் இருக்க மாட்டான்'' என்று பதில் கூறினான் டெய்லருக்கு.

''ஏன்?'' என்று டெய்லர் வினவினான்.

''ஹீ மஸ்ட் ஈட், ஹீ மஸ்ட் ஹாவ் புட் (அவன் சாப்பிட வேண்டும், அவனுக்கு உணவு வேண்டும்)'' என்று வில்வர் பதில் கூறினான்.

''வாட் புட்? (என்ன உணவு?) என்று டெய்லர் வினவினான்.

''த புட் யூ அண்ட் ஐ ஈட் (நீயும் நானும் சாப்பிடும் உணவு)'' வில்வரின் குரல் கடுமையாயிருந்தது.

''அது அனந்துக்கு அவசியமில்லை!'' டெய்லர் நகைத்தான் இதைச் சொல்லி.

''ஏன் அவசியமில்லை? அவனும் மனிதன் தானே?'' என்று வில்வர் வினவினான்.

''மனிதன்தான். ஆனால் நம்மைப் போல் இல்லை. இரு பெண்களுடன் இருக்கிறான்''




சாண்டில்யன்

என்று டெய்லர் மீண்டும் ஆங்கிலத்துக்குத் திரும்பி ''ஹீ ஹாஸ் இனப் புட் இன்ஸைட் (உள்ளே போதிய அளவு அவனுக்கு உணவு இருக்கிறது)'' என்றும் கூறினான். அத்துடன் தொடர்ந்தான். ''யூ ஸீ ஸில்வர்! அனந்த் ஈஸ் ஆப்டர் ஆல் எ பைரேட் லைக் அஸ். என்ஜாய்ஸ் வென் தேர் ஈஸ் ஆப்பர்ச்சூனிடி (இதோ பார் ஸில்வர்! அனந்தும் நம்மைப் போல ஒரு கடற் கொள்ளைக்காரன். சந்தர்ப்பம் கிடைக்கும்போது அனுபவிக்கிறான்'' என்று. டெய்லர் சொன்னதை ஸில்வர் ஒப்புக்கொள்ளா விட்டாலும் அடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் அவன் சித்தம் பெரிதும் குலைந்தது. நீண்ட நேரம் கழித்துக் கலைந்த ஆடையுடனிருந்த இரு பெண்களையும் அழைத்துக் கொண்டு அனந்த் அறையிலிருந்து வெளியே வந்தான். வந்ததும் முன்பு பாறை மீது தான் உலர்த்திய அந்தப் பெண்களின் சேலைத் துண்டங்களை எடுத்து நன்றாக உதறி மடித்து எடுத்துக் கொண்டு உள்ளே சென்று அவற்றை வைத்துவிட்டுத் திரும்பினான். அவன் செய்த ஏதோ சைகையைத் தொடர்ந்து இரு பெண்களும் தங்கள் தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டு சேலையையும் சரிப்படுத்தி கொண்டார்கள். பிறகு மூவரும் பாறைகளில் இறங்கி மற்றொரு பாறையின் மறைவிலிருந்த ராணியின் படகில் ஏறிச் சிந்து தூர்க்கத்தின் வாயிலுக்கு வந்தார்கள்.

அப்படி வந்தபோதும் கரையை அடைவதற்கு முன்பு காஸண்ட்ராவின் தளத்திலிருந்த டெய்லரையும் ஸில்வரையும் நோக்கி உற்சாகமாகக் கையை ஆட்டினான் அனந்த். துடுப்புக்களிலிருந்து ஒரு கையை எடுத்து. அதற்கு ஸில்வர் எந்தவித பதிலையும் சைகை மூலம் சொல்லா விட்டாலும் டெய்லர் தனது இரு கைகளையும் உயரத் தூக்கிக் குதூகலமாக ஆட்டி, ''குட் பாய்! வெல்டன்'' என்று கத்தினான்

''இன்னொருவன் ஏன் கத்தவில்லை?'' என்று சாரு கேட்டாள்.

''நாடகத்தில் நம்பிக்கை இல்லாதவன். கப்பலில் உள்ள மூவரில் மிகக் கூரிய அறிவுள்ளவன்'' என்றான் அனந்த் பதிலுக்கு.





"டெத் சர்டிபிகேட் கேட்கிறாயே! யாருக்கு வேணும்? உனக்கா?"

அதை ஆமோதித்த ராணி சொன்னாள்: "வில்வர் உங்கள் நாடகத்தை நம்பவில்லை" என்று.

"ஆம்" அனந்தின் குரல் சர்வ சாதாரணமாயிருந்தது

"அப்படியானால் நாடகம் வீணா?" என்று ராணி மறுபடியும் வினவினாள்.

"வீணல்ல. எந்த முடிவையும் காலண்ட்ராவில் இங்கிலண்டும், டெய்லரும்தான் எடுக்க முடியும். டெய்லர் ஒரு முறை ஒரு விஷயத்தை நம்பிவிட்டால் அவனை அசைக்கப் பத்து வில்வர்களாலும் முடியாது"

இந்தச் சமயத்தில் உரையாடலில் இடைபுகுந்த சாரு "இனி நாம் என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினாள்.

"இன்று காலை மாதிரியே நடந்து கொள்ள வேண்டும்" என்றான் அனந்த்.

சாருவின் முகத்தில் பொய்க் கோபம் துளிர்த்தது. "ராணி! பார்த்தாயா?" என்று வினவினாள் சாரு கோபம் குரலிலும் லேசாக ஒலிக்க.

ராணி புன்னகை கொண்டாள். "கவனித்தேன்." என்றாள் புன்னகையினூடே.

அனந்த் துடுப்புக்களைத் துழாவுவதை நிறுத்தி "என்ன கண்டுவிட்டீர்கள்?" என்று வினவினான்.

"உங்கள் கெட்ட எண்ணத்தை" என்றாள் சாரு.

"எனக்கா கெட்ட எண்ணம்?" என்றான் அனந்த் வியப்புடன்.

"ஆம்" ராணி திட்டமாகச் சொன்னாள்.

"நீங்கள் ஆடியது நாடகமல்ல" என்றாள் சாரு.

"நாடகம் என்பது ஒரு சாக்கு" என்றாள் ராணி.

"எதற்குச் சாக்கு?" புரியாதது போல் கேட்டான் அனந்த்.

ராணி பதில் சொல்ல முடியாமல் திகைத்தாள். "உங்களை...." என்று ராணி ஆரம்பித்தவள் "சொல்லேன் சாரு" என்று சாருவுக்கு உத்தரவிட்டாள்.

"என்ன சொல்லச் சொல்கிறாய்?"

"இவரைப் பற்றிய உண்மையை."

"நீ சொன்னாலென்ன?"

"கேவலமாயிருக்கிறது சாரு."

"எனக்கு மட்டும் கேவலமில்லையா?"

இந்தச் சமயத்தில் குறுக்கிட்ட அனந்த் "சொல்வதை வெளிப்படையாகத்தான் சொல்லுங்களேன்" என்றான்.

"உங்களைப் போல் நாங்கள் வெட்கம் கெட்டவர்களல்ல" என்றாள் ராணி.

"ஆம்" ஒத்துப் பாடினாள் சாரு.

"சந்தோஷம்" என்றான் அனந்த்.

"எதற்குச் சந்தோஷம்?" என்று வினவினாள் ராணி.

அனந்த் சிறிது சிந்தித்தான். "என்ன சிந்திக்கிறீர்கள்? சொல்லிவிடுங்கள்" என்று ராணி அவனை நெருங்கினாள்.

"வாயைத் திறவுங்கள்" என்றாள் சாரு.

"என்ன கொடுக்கப் போகிறீர்கள்?" என்று வினவினான் அனந்த்.

"சாரு! இவர் அயோக்கியத்தனம் முற்றுகிறது!"

"ஆம் ராணி."

"சந்தோஷம் என்கிறீர்களே அது எதற்காக? முதலில் அதைச் சொல்லுங்கள்" என்று ராணி கேட்டாள்.

"நீங்கள் வெட்கம் கெட்டவர்களல்ல என்று சொல்லவில்லையா?" என்று அனந்த் வினவினான்.

"சொன்னோம்" இருவரும் ஏககாலத்தில் பேசினார்கள்.

"அதற்குத்தான் சந்தோஷம் தெரிவித்தேன். வெட்கம் பெண்களுக்கு அணிகலன்" என்ற அனந்தை இரு பெண்களும் சுடச் சுடப் பார்த்தார்கள். ஆளுக்கொரு கையைப் பிடித்துக் கொண்டார்கள். "உங்களை இப்படியே கடலில் எறிந்து விடுகிறேன்" என்றாள் ராணி.

"இவர் துடுக்குத்தனத்துக்கு அதுதான் சரி" என்றாள் சாரு.

"அப்படி எறிந்தால் சுழலில் சிக்கிவிடுவேன்" என்றான் அனந்த்.

"சுழலா?" இருவரும் வியப்புடன் கேட்டார்கள்.

"ஆம்" என்று அனந்த் கூறினான். "குலசேகர ஆழ்வார் சொன்னது சரிதான்" என்றும் கூறினான்.

"ஆழ்வாரா?" ராணி வினவினாள் வியப்புடன்.

"தமிழ்நாட்டில் அப்படியொரு பக்தர் கூட்டம் உண்டு. அவர்களில் குலசேகரர் ஒருவர்" அனந்த் சொன்னான் உணர்ச்சியுடன்.

"என்ன சொன்னார் அவர்?" என்று சாரு கேட்டாள்.

"கடலில் சுழல் எப்படி இருக்கிறதோ அப்படி பெண்டாட்டியும் சுழல் என்றார், மகானுபாவன்!" இதைச் சொல்லிக் கண்களை உயர்த்தினான் ஆகாசத்தை நோக்கி.

"உங்களுக்குப் பெண்டாட்டி ஏது?" என்று சாரு கேட்டாள்.

"பின்னால் வருபவர்களுக்கு முன்னிலணக்கணம்."

"அதாவது?" ராணி வினவினாள்.

"நீங்கள்!" என்ற அனந்த் அந்தப் பெண்களின் சீற்றத்தைக் கண்டு சரேலென்று துடுப்புக்களை எடுத்து வேகமாகத் துழாவ, படகு துரிதமாகச் சிந்து துர்க்கத்தின் வாயிலை அடைந்தது. கரையை அடைந்ததும் இரு பெண்களும் முதலில் கரையில் தாவிக் குதித்துத் தளபதி மாளிகையை நோக்கி நடந்தார்கள். அவர்களுக்குப் பிறகு கரையில் இறங்கி இரும்பு முளையில் படகைப் பிணைத்த அனந்தை வரவேற்க அந்த இடத்திலேயே சங்

கர்பந்த் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கக் காத்திருந்தார். அவன் கரையேறியதும் சங்கர் பந்த் வினவினார் வறண்ட குரலில்,''இதுஅத்து மீறிப் போகின்றது'' என்று.

அனந்த் அவரை ஏறிட்டு நோக்கினான். குழப்பம் சிறிதும் இல்லாத பார்வையுடன். ''எது?'' என்றும் வினவினான் அதிகாரக் குரலில்.

''இரு பெண்களுடன் உனது சல்லாபம்'' என்றார் சங்கர்பந்த்.

''காரணம் உங்களுக்குத் தெரியும்'' என்றான் அனந்த்.

''மற்றவர்களுக்குத் தெரியாது. ஆனால் காரணம் நீங்கள் சொன்னதுதானா என்பதும் சந்தேகமாயிருக்கிறது'' என்றார் சங்கர்பந்த்.




''நேற்று என் கனவிலே உங்களுக்கு லட்ச ரூபாய் பரிசு விழுந்திருக்கு!''

''அதுதான் என் கனவிலே வந்து கடன் கேட்டீங்களா!''

''சரி வா.. தளபதியைப் பார்ப்போம்'' என்ற துலாஜி அனந்தைஅழைத்து கொண்டு சங்கர்பந்தின் மாளிகையை அடைந்தான்.

இருவரையும் கடுகடுப்பான முகத்துடன் வரவேற்றார் சங்கர்பந்த். ''அடுத்து என்ன நாடகம்?'' என்று கேட்டார்.

''இன்றிரவு...'' என்று துலாஜி தொடங்கினான்.

''சொல்லுங்கள்.''

''நடப்பதை நீங்கள் கண்டு கொள்ளக் கூடாது.''

''என்ன நடக்கும்?''

''நீங்களே பார்க்கலாம்.''

''பார்த்து?''

''உணர்ச்சி வசப்பட்டுக் காரியத்தைக் கெடுக்கக் கூடாது.''

''சந்தேகமாயிருந்தால் துலாஜியைக் கேட்பதுதானே?'' என்றான் அனந்த்.

''அவன் உனது நண்பன்'' என்று சங்கர் பந்த் அதற்கும் காரணம் காட்டினார்.

''இல்லாவிட்டால்விில்வரைக்கேளுங்கள்.''

''அவனையா?''

''ஆம்.''

''அவன் விரோதி.''

''இருப்பினும் உங்களைவிட அறிவாளி.''

இதை ரசிக்கவில்லை சங்கர்பந்த். இருப்பினும் அதைப் பற்றிப் பொருட்படுத்தாமல் கேட்டார். ''அவனிடமிருந்து என்ன தெரிந்து கொள்ள வேண்டும்?'' என்று.

''நான் நடத்துவது காதல் நாடகம் என்பதை அவன் சொல்வான். லேசாக அவனை ஏமாற்ற முடியாது'' என்ற அனந்த் ''உங்களை இரவு சந்திக்கிறேன்'' என்று கூறிக் கோட்டைக்குள் சென்று விட்டான்.

சிந்து துர்க்கத்தின் வாயிலில் நுழைந்தவன் சங்கர்பந்தின் மாளிகைக்குச் செல்லவில்லை. பீரங்கி அறைகள் இருந்த கோட்டை மதிலை நோக்கிச் சென்றான். அன்று முழுவதும் கோட்டைத் தெருவிலோ சிவாஜி சிலை இருந்த இடத்திலோ அவன் தலைகாட்டவே இல்லை. பீரங்கி அறை ஒன்றில் உணவு வரவழைத்து உண்டு படுத்தவன் மாலையில் எழுந்து புத்தாடை அணிந்து இரு கைத்துப்பாக்கிகளையும் இடுப்பில் செருகி நாலு அறைகள் தள்ளியிருந்த துலாஜியின் அறைக்குச் சென்றான்.

அவனுக்காகக் காத்திருந்த துலாஜி ''கடிதம் என்ன ஆயிற்று?'' என்று வினவினான்.

''ராணியிடம் கொடுத்துவிட்டேன்'' என்றான் அனந்த்.

''நல்லது.''

''அடுத்த நடவடிக்கைக்குத் தயார் செய்ய வேண்டும்.''

''என்ன காரியம்?''

''நீங்கள் பார்க்க இருக்கும்போது நான் சொல்ல அவசியமில்லை'' என்று கூறிய துலாஜி அனந்தை அழைத்துக் கொண்டு செல்லு முன்பு ''எது நடந்தாலும் பதற்றப்படாதீர்கள்'' என்று எச்சரித்துச் சென்றான்.

நள்ளிரவும் வந்தது. மாளிகை உப்பரிகையில் நின்றிருந்தார் சங்கர் பந்த். அப்பொழுது மாளிகையிலிருந்து வெளியேறிய ராணி சிவாஜி சிலையிருந்த இடத்தை நோக்கி நடந்தாள். அதன் பக்கத்து அறையில் நுழைந்தாள். அரை நாழிகை ஓடியது. அந்த அறையை நோக்கி அனந்த் நடந்து சென்றான். அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக் கொண்டான். கதவு சிறிது பலமாகவே தாளிடப்பட்டதால் அதன் ஒலி கோட்டையில் பலமாகவே கேட்டது.

உள்ளேயிருந்த ராணி கேட்டாள், ''பெண்டாட்டி எனும் கழலில் சிக்கிவிட்டீர்களா?'' என்று. புன்முறுவலும் கொண்டாள்.

''ஆம்'' என்றான்.

''மேலே என்ன?'' என்று ராணி வினவினாள்.

''நடக்க வேண்டியது நடக்கும்'' என்றான் அனந்த்.

நீண்ட நேரமாகியும் கதவு திறக்கப்படாததால் சங்கர்பந்த் சினந்து கிளம்ப முற்பட்டார் தமது மாளிகையிலிருந்து. அவர் மாளிகைக் கூடத்துக்கு வந்ததும் அங்கு உட்கார்ந்திருந்தான் துலாஜி கைத்துப்பாக்கியுடன். ''நீங்கள் மாளிகையை விட்டுக் கிளம்ப வேண்டாம்'' என்ற துலாஜி கைத்துப்பாக்கியை அவரை நோக்கி நீட்டவும் செய்தான்.

''ஏன்?''

இரண்டு காரணங்களைச் சொன்னான் துலாஜி. திகைப்பும் சீற்றமும் கலந்த உணர்ச்சிகள் சங்கர்பந்தின் முகத்தில் தோன்றின.

(தொடரும்)

# தேள்

விஜயா வரதன்

"டொக்! டொக்!" உயர்ந்த குதிகால் செருப்பின் தாளம் தவறாத ஓசையைக் கேட்டு அலுவலகத்தில் அனைவருமே தங்கள் பார்வையைத் திருப்புகின்றனர்.

ஹரிணி ஆபீசில் நுழைந்து விட்டாள் என்றால் மணி சரியாக 10—25 என்று கடிகாரத்தைச் சரிசெய்துகொள்ளலாம்.

அரட்டை சாம்பமூர்த்தி, ஹெட் கிளார்க்கிடம் ஏதோ பேசிக் கொண்டிருந்தான். கண்களுக்கு விருந்தாக அவளைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தாள் அவள்.

"ஸார்... இந்த மிஸ்... வேறு எங்கேயாவது பெரிய கம்பெனிக்கு ரிசப்ஷனிஸ்டா போயிருந்தா கை நிறையச் சம்பாதிக்கலாம். இந்த உதவாக்கரை ஆபீஸிலே பெர்சனல் கிளார்க்கா இருந்து என்ன பிரயோசனம்?"

கரிக்கட்டையாக நிற்கும் தன் மனைவியை நினைக்கும்போதெல்லாம் தந்தச் சிலையாகக் கண் முன் நடமாடும் ஹரிணியின் தோற்றம் சாம்பமூர்த்தியின் மனசைத் துளைக்கத்தான் செய்கிறது.

அரைச் சாண் அகல ஜாக்கெட்டின் கீழ் சந்தன நிற முதுகும், வயிற்றுப் பகுதியும் பளீரென்று ஒளி வீசுகின்றன. ஷிபான் சாரி தொப்புளை விட்டுக் கீழே இறங்கி அவள் அங்க அழகைப் பறை சாற்றுகிறது.

எத்தனையோ இளைஞர்களின் கனவுகளில், நடுத்தர வயதினரின் பெருமூச்சுக்களில் நர்த்தனமாடினாள் ஹரிணி.

பெண்ணுக்குப் பெண்ணே பொறாமை கொள்ளும் அவள் அழகில்... அந்த உதட்டைச் சுழித்துப் பேசும் பேச்சில் ... மனோகரமான புன்னகையில்... பல சக ஊழியைகள் அவளோடு பேசும் சாக்கில், பழகும் விதத்தில் தங்கள் ஆற்றாமையைப் போக்கிக் கொள்ளவோ, இல்லை வளர்த்துக் கொள்ளவோ தவறுவதில்லை.

அவள் காணாத நேரங்களில் அவளைப் பற்றி எவ்வளவு பொறாமைப் பேச்சுக்கள் பேசினாலும், ஏனோ அவளை நேரில் கண்டால் எல்லோருக்குமே ஒருவித கிறக்கம் இருக்கிறது! கிறக்கமா அது? அவர்களை அறியாமல் ஒருவித தாழ்வு மனப்பான்மைதான்!

"பர்ர்ர்ர்ர்....!" பஸ்ஸர் ஒலித்து ஆபீசர் அழைப்பு அனுப்பி விட்டார்.

ஹெட் கிளார்க்கிடம் ஒரு மென் புன்னகையைச் சிந்திவிட்டு, நோட் புக்கும் பென்சிலுமாக ஆபீசரின் அறைக்குள் நுழைகிறாள் அவள்.

"டொக்....டொக்...!" அவள் செருப்பின் ஒலி கேட்டு நிமிர்ந்து அவளைப் பார்த்தவர், கண்களாலேயே அவளை உட்காரச் சைகை செய்தார்.

மேலிடத்திலிருந்து அவர் அலுவலகத்தைக் கண்டபடி சாடிக் கடிதம் வந்திருந்தது. அதற்குப் பதில் தயாரித்துக் கொண்டிருந்தார் ஆபீசர்.

ஹெட் கிளார்க் கொண்டு வந்து கொடுத்த ஃபைலிலிருந்து தாங்கள் எந்தெந்தத் தேதியில் பதில் அனுப்பினோம் என்பதை, ஃபைலை ஊன்றிப் படித்தவாறு டிக்டேட் செய்து கொண்டிருந்தார் அவர்.



'எவ்வளவு ஒழுங்காக அவர் அவசர வேலைகளை முடித்து உடனுக்குடன் அனுப்பியும் கூட.... ஏன் இந்தக் குற்றச்சாட்டு?'— ஆபீசரின் மூளை தங்கள் மேல் எவ்விதக் குற்றமும் இல்லை என்பதை நிரூபிப்பதில் முனைந்திருந்தது.

வேகமாகச் சொல்லச் சொல்ல, எவ்விதத் தடுமாற்றமும் இன்றிக் குறிப்பு எடுத்துக் கொண்டிருந்தாள் ஹரிணி.

சில விஷயங்களை யோசனை செய்து கொண்டே கோவையாகச் சொல்லிக் கொண்டிருந்தார் அவர்.

ஏதோ குறிப்புச் சொல்லிக் கொண்டே வந்தவரின் கண்களில் ஹரிணியின் நாற்காலிக்கு மேல் ஏதோ ஊர்ந்து கொண்டே அவள் முதுகுப் புறமாய் நகர்வது தெரிந்தது. ஒரு கணம் திடுக்கிட்டார் அவர்.

அந்த வெள்ளையான முதுகில் பாழாய்ப் போன தேள் வகையாகக் கொட்டி, விஷம் தலைக்கேறி! — சிறு வயதில் தேள் கொட்டி இறந்து போன அவர் சின்னப் பெண் கண் முன்னால் தோன்றினாள்.

இனி யோசிக்க நேரமில்லை. கொஞ்சம் அசந்து ஹரிணி திரும்பினாலும் போச்சு! ஒரே வேகத்தோடு தம் இருக்கையை விட்டு எழுந்தவர் ஹரிணியை முதுகில் கைகொடுத்து நாற்காலியை விட்டு அவளை வெளியே இழுத்தார்.

எதுவுமே தோன்றாமல் விக்கித்துச் செயலிழந்து போன ஹரிணி, ஆபீசரின் செய்கையால் அதிர்ச்சியுற்றுக் கத்திவிட்டாள்.

எதேச்சையாக ஃபைலோடு உள்ளே நுழைந்த ஹெட் கிளார்க்கின் பார்வையில் ஆபீசரின் பிடியில் ஹரிணி இருந்த நிலைதான் பட்டது.

''என்ன சார் இது.... அநியாயம்....?'' ஹெட் கிளார்க் உரத்த குரலில் அதிரப் பேசினார்.

''தேள்.... தேள்....!'' — ஆபீசரின் நாக்கு பயத்தினால் குழறியது.

ஹரிணியின் முதுகுக்கு நேரே கொடுக்கைப் போல் வாலைத் தூக்கி வேடிக்கை செய்த பெரிய பல்லி ஒன்று தரையில் 'சொத்' தென்று விழுந்து ஓடியது.

'பல்லியைத்தான் தேளென்று தவறுதலாக நினைத்து விட்டேனே... சனியன் பிடிச்ச மூக்குக் கண்ணாடி.... மாத்திக்க வேளையே வரலியே!'

''ஹரிணி... ப்ளீஸ்... நான் பார்க்கறச்சே தேளாட்டம் தோணித்து.... அநியாயமா உன்னைக் கொட்டிட்டா என்ன செய்யறதுன்னுதான் உன்னைத் தள்ளி விட்டேன் என் பொண் போலதான் நீ..! தப்பா நினைச்சுக்காதேம்மா!''

''ஆஹா.... ஹா.... இந்த ஆபீஸிலே நான் கொஞ்சம் பார்க்க நன்னு இருக்கிறது எல்லார் கண்ணையும் கரிக்கிறது... எவ்வளவு நான் ஆசையோ... இன்னிக்கு மட்டும் ஹெட் கிளார்க் சார் வரலேன்னு... நான் என்னவாகியிருப்பேனோ!'' கண்களைக் கசக்கிக்கொண்டு அழத் தொடங்கினாள் அவள்.

என்ன சமாதானம் சொல்வது என்று தெரியாமல் கையைப் பிசைந்தார் ஆபீசர். நாம் அப்பாவித்தனமாக நினைத்தது எவ்வளவு பயங்கர விபத்தாகப் போய்விட்டது!

''ஹெட் கிளார்க் சார்... நீங்களாவது ஹரிணிக்குச் சொல்லுங்கோ... நான் என் பொண்ணுக்கு மேலே ஹரிணியை நினைச்சிண்டிருக்கேன்... இந்த விஷயத்தைப் பெரிசு படுத்தாம இருக்கச் சொல்லுங்கோ சார்! ப்ளீஸ்.....!''

''அதெப்படி சார் கண்டிப்பா இருக்க வேண்டிய நீங்களே இப்படி நடந்துக்கிட்டீங்கங்கிறதை நானே கண்ணாலே பார்த்துட்டேன்.... நிறைய லேடீஸ் வேலை பார்க்கிற இடத்திலே உங்க நடத்தை சரியில்லேன்னு, அதெப்படி சார் நாங்க வாயை மூடிக்கிட்டிருக்க முடியும்!'' — தாம் நடந்து கொண்டதற்கு ஹெட் கிளார்க்கிடம் நயமாக மன்னிப்புக் கேட்டும் கூட விஷயம் ஹெட் ஆபீஸ் வரை போய் விட்டது.

தவறு எதுவுமே நடக்காமல் ஜோடித்துச் சொல்லப்பட்ட கதையைக் கேட்டு ஆபீசில் உள்ள அனைவரும் தம்மை ஏதோ குற்றவாளியைப் போலப் பார்க்கையில், தம் சர்வீசெல்லாம் மறந்து கூனிக் குறுகிப் போனார் அவர்.

சஸ்பென்ஸ் உத்தரவை வாங்கிக்கொண்டு தள்ளாடித் தம் வீட்டுப் படியேறி, காரணத்தை மனைவியிடமோ, குழந்தைகளிடமோ சொல்லத் தயங்கியபடி நின்றார் ஆபீசர்.

'எந்த விதக் கெட்ட எண்ணமும் இல்லாமல், ஒரு பெண்ணை விஷக் கடியிலிருந்து தப்புவிக்கத் தாம் நினைச்சதுக்கு ஏன் இந்தத் தண்டனை!' துக்கம் பீறிட்டு எழுந்தது அவர் உள்ளத்தில்.



''மாமா! அதென்ன! ஒரு பக்கத்து மீசை முறுக்கிட்டு நிக்குது. இன்னொரு பக்கத்து மீசை தொங்கிட்டுது?''

''மாமியை அந்தண்டை போகச்சொல்லுடா! தானே அதுவும் முறுக்கேறிக்கும்!''

அவர் மனம் அல்லல் படும் அதே நேரத்தில் ஹரிணி... தன் பாய் பிரெண்டு ஒருவனோடு படம் பார்த்துக் கொண்டிருந்தாள்!

அவள் மெல்லிய சந்தன இடையை அவன் கை வருடிக் கொண்டிருந்தது. அவள் காதுகளில் ''ஹரிண்... இந்தச் சந்தன மேனி அழகிலே சொக்கித்தான் உன்பின்னாலே சுற்றுகிறேன்! ஹௌலவ்லி!'' என்றான்.

'இந்த அருணைப் போலத் தன் அழகிலே சொக்கி, தன் பின்னாலே சுற்றினவர்கள் எத்தனை பேர்!...ராகேஷ், மதன், குமார், சேகர், அப்புறம் காலேஜ் படிக்கறச்சே தான் எத்தனை பேரோடு சுத்தியிருக்கோம்...!' தன் அழகிலே தன்னை யறியாமல் ஏற்பட்டிருக்கும் ஈடுபாட்டிலே பெருமிதம் கொண்டாள் ஹரிணி.

'இவ்வளவு யங் பெல்லோஸாம் எங்கிட்ட சுத்தறதை நினைச்சா, அந்த ஆபீசர் கிழம் பொறுமைப்பட்டா?' அவளையும் மீறிச் சிரிப்பு வந்தது.

''என்ன ஹரிணி... நீ மாத்திரம் சிரிச்சுக் கிட்டா.... எனக்குந்தான் என்ன விஷயம்னு சொல்லிட்டுச்சிரியேன்!'' அருண்கெஞ்சினான்.

''அருண்.... நீங்க வருணிச்சதும்தான் எனக்கு ஞாபகமே வந்தது.... எங்க ஆபீசர் கிழம் என் அழகிலே மயங்கி ஒரு கணம் தடு மாறிடுத்து... நான் நல்ல வகையா மாட்டி வச்சுட்டேன்! அதுக்கு இப்போ சரியான பாடம் கிடைச்சாச்சு!'' — ஏதோ ஹாஸ்யத்தைச் சொல்வது போல் சொல்லிவிட்டுக் 'கொல்'லென்று சிரித்தாள் ஹரிணி. அவனும் அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டான்.

---

தேவர் பிலிம்ஸாரின் படம் என்றால் மக்கள் அதில் என்னென்னவெல்லாம் எதிர் பார்ப்பார்களோ அவைகளெல்லாம் இருக்கின்றன. வழக்கம்போல் மிருகங்கள் முக்கியமாக வருகின்றன. ஆடும், நாயும் கயிற்றின் மேல் நடக்கின்றன. அவற்றின் எஜமானி ரதி சொல்லுவதை யெல்லாம் புரிந்து கொள்ளுகின்றன. ரதி ஆடிப் பாடித் தெருவில் வித்தை காட்டுகிறார்; நடிக்க முயன்றிருக்கிறார்; ஆனால் முடியவில்லையே!

தமிழ்ச் சினிமா உலகின் சூபர் ஸ்டார், ஸ்டைல் மன்னன், ரஜினிகாந்த் கொள்ளைக்காரனாக வந்து, போலீஸ் இலாகாவின் கண்களில் மண்ணைத் தூவி, இன்ஸ்பெக்டராகி விடுகிறார். பலவிதமான டிஷ்யூம், டிஷ்யூம் சண்டைக் காட்சிகளிலும் வெளுத்து வாங்குகிறார். அந்தக் கிராமத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டராக வேலை பார்க்க வேண்டியவரும், ரஜினிகாந்தும் சிறு வயதில் பிரிந்துவிட்ட சகோதரர்களாம்! ஏதோ கதையளக்க 'ஃப்ளாஷ் பாக்'கில் முயன்றிருக்கிறார்கள்!

சுஜாதா ஒரிஜினல் இன்ஸ்பெக்டரின் மனைவியாக, ரஜினிகாந்தின் அண்ணியாக வந்து அருமையாக நடித்திருக்கிறார். பாவம், விஜயன், ஏதோ வந்து போகிறார்.

கராத்தே மணி ரஜினிகாந்துடன் பல முறை மோதிப் படத்தில் தமக்கு ஒரு தனி இடம் தேடிக் கொண்டு விட்டார். ஜயமாலினியின் கிளுகிளுப்பூட்டும் நடனம் அளவுக்கு அதிகமாகவே இருக்கிறது. வி. ராமமூர்த்தியின் வண்ண ஒளிப் பதிவு ஒன்றுந் தரம்! படத்தை தியாகராஜன் டைரக்ட் செய்திருக்கிறார்.

மிருகங்களை வைத்து எத்தனையோ காட்சிகளை எடுப்பவர்கள் ஆடுகள் சில சினிமா டிக்கெட் வாங்கிக்கொண்டு தியேட்டருக்குள் நுழைவது போலவும் படம் பிடிக்கலாமே?

— காந்தன்



# எடுத்துச் சொன்னார் ஒருவர், ஏற்றுக் கொண்டார் மற்றவர்; அடைந்தனர் இருவரும் லாபம், அதுவே நல்ல விவேகம்!

இருவரும்
இப்போது சேமிப்பில்
காட்டுகின்றனர்
வேகம்!

ஒருவர் மற்றவருடைய அனுபவத்திலிருந்து பயனடைவதே விவேகமான செயலாகும். இவ்விருவரும் சேமித்திட முடிவு செய்தனர், எனவே இவர் தம் குடும்பம் நல்வாழ்வு பெறுவது திண்ணம். பாங்க் ஆஃப் பரோடாவில் சேமிப்பு கணக்கு வைத்துள்ள இலட்சக்கணக்கான இல்லத்தரசிகளே இந்த விவேகத்தின் சான்றாக உள்ளனர். இயன்ற போதெல்லாம், இயன்ற அளவு இவர்கள் சேமித்துக் கொண்டிருப்பதன் மூலம், தங்கள் குடும்பம் செழிப்புடன் விளங்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளனர்.
பாங்க் ஆஃப் பரோடாவில், சேமிப்பு கணக்கு மட்டுமன்றி இன்னும் நல்ல பல திட்டங்கள் உண்டு. நீங்கள் நல்ல முறையில் சேமித்திட, அவைகள் உதவுகின்றன.
நீங்களும் சேமிக்கத் தொடங்குங்கள்—நீங்களும் உங்கள் குடும்பமும் நல்வாழ்வு நோக்கி நடைபோடலாமே.

**சேமிப்பது ஒரு நல்ல பழக்கம்**

கீழ்க்கண்ட திட்டங்களில் உகந்ததை தேர்ந்தெடுங்கள்.

1. மந்த்லி இன்கம் பிளான்
2. ஃபிக்ஸட் டெபாஸிட் பிளான்
3. ரெகுலர் இன்கம் பிளான்
4. ரெக்கரிங் டெபாஸிட் ஸ்கீம்
5. ரெகுலர் இன்கம்-கம்-ரெக்கரிங் டெபாஸிட் பிளான்
6. ஃபெஸ்டிவல் டெபாஸிட் பிளான்

முழுமையான பாங்கிங் வசதிகளையும் சேவைகளையும் பெற, பாங்க் ஆஃப் பரோடா உங்களை முகமன் கூறி வரவேற்கிறது.



**பாங்க் ஆஃப் பரோடா**

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

ULKA-BOB-1/80 TAM

# தேவையில்லா பயங்கள்

## டாக்டர் பேசுகிறார்!



❋ "பூச்சூட்டலுக்கு அவ்வளவு செலவு செய்தோமே...."

இவ்வளவு முன்னேற்றம் அடைந்த இந்தக் காலத்திலும் எத்தனையோ பெண்கள் கர்ப்பம் தரித்திருப்பதை அறிந்தால் பயந்து போகிறார்கள். அநாவசிய பீதியை, யார் யாரோ பேசுவதைக் கேட்டு வளர்த்துக் கொள்கிறார்கள். இவை யெல்லாம் தேவையில்லாப் பயங்கள்.

ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். கர்ப்பம் என்பதைத் தாங்களே தீர்மானித்துவிடாமல் டாக்டரைக் கேட்டு ஊர்ஜிதம் செய்து கொள்வது நல்லது. முப்பது நாட்களில் சொல்ல முடியும்; 45 நாட்களில் நிச்சயமாகக் கூறிவிட முடியும்.

குறிப்பிட்ட இடைவெளியில் வைத்தியரிடம் பரிசோதனைக்கு வந்து கொண்டிருந்தால் பிரசவத்தின்போது ஏற்படும் அநாவசியப் பிரச்னைகளைச் சுலபமாகத் தவிர்த்து விடலாம்.

கடற் பஞ்சு போல் இருக்கும் கர்ப்பப்பை லேசாக உப்பியிருப்பதைப் பார்த்துக் கர்ப்பத்தை ஊர்ஜிதம் செய்வோம். பொதுவாகக் கர்ப்பப் பை ஒன்றரை அங்குல அகலமும், மூன்று அங்குல நீளமும்தான் இருக்கும். இதன் இலாஸ்டிக் தன்மைக்கு இணையாக எதையும் கூற முடியாது. குழந்தை வளர வளர இது விரிவாகும்.

இரட்டைக் குழந்தையா என்பதைப் பரிசோதனையின்போது கர்ப்பப்பை விரிவடையும் அளவைக் கொண்டு சொல்லிவிட முடியும்.

சிலர் கர்ப்பம் உண்மையா என்பதைக் கூடப் பரிசோதித்துக் கொள்வதில்லை. மாதவிலக்கு ஏற்படவில்லை, இது கர்ப்பம்தான் எனத் தீர்மானித்து விடுகிறார்கள். அதற்கான சடங்குகளையும் டாம்பீகமாகச் செய்து விடுகிறார்கள். பிறகு அது கர்ப்பமே இல்லை என்னும்போது மிகவும் வருத்தப்படுகிறார்கள். பூச் சூட்டலுக்கு இவ்வளவு செலவு செய்தேனே என மாய்ந்தும் போகிறார்கள். சிலருக்கு வயிற்றில் ஏதாவது கட்டி வளர்ந்தாலும் வயிறு உப்புவதுண்டு. இதைக் கவனிக்காமல் விட்டு விட்டால் ஆபத்தாகிவிடும். வேறு சிலருக்குப் பல வருஷங்கள் கரு தரிக்காமல் இருந்து அந்த ஏக்கம் வளர்ந்துவிடத் திடீரென ஒரு நாள் தான் உண்டாகியிருக்கிறோம் என ஒருவகை பிரமை ஏற்பட்டுவிடுவதும் உண்டு. மருத்துவரிடம் பரிசோதனைக்கு வந்தால் இத்தகைய தவறான முடிவுகளைத் தவிர்க்கலாம்.

தவிர, பிறக்கப் போகும் குழந்தைக்கு எந்த வகை வியாதியும் பாதிக்காமல் பார்த்துக் கொள்ளவும் டாக்டரிடம் போவது அவசியம். தாய் ஆரோக்கியமாக இருக்கிறாளா என்பதை டாக்டர் பார்த்து, குழந்தையின் ஆரோக்கியத்தையும் அளவிடுவார். தாய் எந்த வகை ரத்த இனத்தைச் சேர்ந்தவள் என்பதை டாக்டர் முன்கூட்டியே பார்த்து வைத்துக் கொள்வது பின்னால் பிரச்னைகள் ஏற்படுமாயின் சட்டென்று சமாளிக்க உதவும்.

ஒரு நீர் நிறைந்த பந்தின் மத்தியில் வளர்வது போல் குழந்தை கருப்பையில் வளர்கிறது. மெல்லிய ஆனால் பலம் வாய்ந்த கர்ப்பப் பையில் மூடப்பட்டு இருப்பதால் வெளியுலக பாதிப்பே கருவுக்கு இருக்காது. ஒரு வகை திரவத்தால் சூழப்பட்டு இருப்பதால் வெளி உலக அதிர்ச்சிகள் கருவைப் பாதிப்பதில்லை.

ஆனாலும் அளவுக்கு மீறி உழைப்பது, நீண்ட தூர பயணங்கள், நல்ல வெளிச்சம், காற்று இல்லாமல் இருத்தல் போன்றவைகளால் கர்ப்பிணிக்குப் பாதிப்பு உண்டு. அடிக்கடி சினிமாவுக்குச் சென்று தியேட்டரில் தொடர்ந்து பல மணி நேரங்கள் அடைந்து கிடப்பது ஆரோக்கியத்தைப் பாதிக்கும்.

**தகவல்: டாக்டர் ருக்மிணி சௌரிராஜன்**

**பேட்டி: குயிலி ராஜேஸ்வரி.**

---

சிரிப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள். அது இதயத்தின் இசை.

சிந்திப்பதற்கு நேரம் ஒதுக்குங்கள். அது சக்தியின் பிறப்பிடம்.

விளையாட நேரம் ஒதுக்குங்கள் அது இளமையின் ரகசியம்.

படிக்க நேரம் ஒதுக்குங்கள் அது அறிவின் ஊற்று.

நட்புக்கு நேரம் ஒதுக்குங்கள். அது மகிழ்ச்சிக்கு வழி.

உழைக்க நேரம் ஒதுக்குங்கள் அது வெற்றியின் விலை.

-யாரோ

-பிரியா பானு

---



# பிடிவாதத்துடன் தேசத்தொண்டு!

ரா. அ. பத்மநாபன்



**1892**-ஆம் ஆண்டு. வரகனேரி குக்கிராமம். சில இளைஞர்கள் பேசிக் கொள்கிறார்கள். வரகனேரிக்குத் தெற்கே ஒரு வாய்க்கால். அதன் அருகே ஒரு குளம். அதன் கரையில் ஓர் அரசமரம். வாய்க்காலுக்கு அக்கரையில் அடர்ந்த புதர். புதர் நடுவே ஓர் உக்கிரமான காளி கோவில். இளங்காளியம்மன் என்று பெயர். பகலிலேயே நரிகள் ஊளையிடும், பாம்புகள் நெளியும் அந்தப் புதர்களைத் தாண்டிக் காளி கோவிலுக்கு நள்ளிரவில் போய் வர முடியுமா என்பது சிறுவர்களிடையே கேள்வி. பேய் உலாவும் இருண்ட இரவில் போய்வர வேண்டும். சும்மா போய் வந்ததாகச் சொல்லக் கூடாது. காளி கோவில் கதவைத் தொட்டுக் குங்குமமும், பலி பீடத்தைத் தொட்டு எண்ணெய்க் கரியும் கொண்டுவர வேண்டும். இது முடியுமா?

நண்பர்கள் நடுங்கிப் பின்வாங்க, சுப்பிரமணியன் துணிந்து சவாலை ஏற்றான். குங்குமமும் கரியும் கொண்டு வந்து தான் தீரன் என்று நிரூபித்தான்.

விக்கிரம வருஷம் பங்குனி மாதம் 22-ம் தேதி (2–4–1881) கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்து, சுப்பிரமணியன் என்ற திருநாமம் பெற்றார் வ. வே. ஸு. ஐயர்.

பி. ஏ. படிப்பில் புகழுடன் தேர்ந்து "ப்ளீடர்" என்ற பழங்கால வக்கீல் படிப்பில் முதல் தரத்தில் தேறி, திருச்சியில் சட்டத் தொழிலில் அமர்ந்த சுப்பிரமணியன் சில ஆண்டுகளில் ரங்கூனில் ஆங்கிலேய பாரிஸ்டர் ஒருவரது உதவியாளராகிவிட்டார். ஐயரது செய்நேர்த்தியைக் கண்டு வியந்த ஆங்கிலேயர், அவர் லண்டன் சென்று பாரிஸ்டர் ஆனால், பெரும் புகழும், பெருஞ் செல்வமும் சம்பாதிக்கலாம் என்று கூறினார். 1907-ம் ஆண்டு அக்டோபர் மாதம் ஐயர் லண்டன் போய்ச் சேர்ந்தார்.

லண்டனில் சைவ உணவை நாடி "இந்தியா ஹவுஸ்" என்ற இந்திய மாணவர் விடுதியை அடைந்தார், ஐயர். இந்தியா ஹவுஸ் நிர்வாகம் விநாயக தாமோதர ஸாவர்க்கர் என்ற இளைஞர் வசம் இருந்தது. ஸாவர்க்கர் தீவிர தேசபக்தர்; "அபிநவ பாரதம்" என்ற ரகசியச் சங்கத்தைத் தோற்றுவித்து, அதன் மூலம் லண்டனில் இந்திய விடுதலைக்காக இளைஞர்களைப் புரட்சி வேலைகளில் பயில்வித்து வந்தார்.

மடிப்புக் கலையாத உடைகளில் வெள்ளையர் நடையுடை பாவனைகளுடன் "இந்தியா ஹவு"ஸில் கால் வைத்த ஐயர், ஸாவர்க்கரைச் சந்தித்த மாத்திரத்தில் அடியோடு மாறிப் போனார். ஸாவர்க்கரின் புரட்சி வேலைகளில் அவரது வலது கை ஆகிவிட்டார்!

மதன்லால் திங்கரா என்ற பஞ்சாபி இளைஞன் லண்டனில் ஸர் கர்ஸான் வில்லி என்ற பிரிட்டிஷ் அதிகாரியைச் சுட்டுக் கொல்ல வழி வகுத்தவர் ஐயர். கர்ஸான் வில்லி கொலை லண்டனையே கதிகலங்க வைத்தது.

இந்திய விடுதலைக்காகத் துண்டுப் பிரசுரங்களை வெளியிடுவது, கூட்டங்கள் நடத்துவது, துப்பாக்கிப் பயிற்சி பெறச் செய்வது, வெடிகுண்டு தயாரிப்புப் பயிற்சி தருவது, துப்பாக்கிகளை வாங்கி இந்தியாவுக்கு ரகசியமாக அனுப்புவது, இந்தியாவில் ராணுவத்திலுள்ள படை வீரர்களிடையே தேச பக்தி எழச் செய்து, அவர்கள் சமயத்தில் விடுதலைக்கு உதவுமாறு செய்வது போன்ற பல திட்டங்கள் இந்தியா ஹவுஸில் உருவாயின.

இந்தியா ஹவுஸில் நடப்பதை ஊடுருவி அறிய பிரிட்டிஷ் அதிகாரிகள் அதை இரவு பகலாய்க் கண்காணித்தார்கள். அத்துடன், இந்திய உளவாளிகளை அனுப்பி, "இந்தியா ஹவுஸ்" அங்கத்தினர்களாகச் செய்து ரகசியங்களை அறிய முயன்றார்கள்.

கீர்த்திகர் என்ற உளவாளியை ஐயரும் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் என்ற தோழரும் துப்பாக்கி முனையில் உண்மையை ஒப்புக் கொள்ளச் செய்தார்கள். கீர்த்திகர் இனியும் தனது பிரிட்டிஷ் எஜமானர்களுக்கு வாரா வாரம் ஓர் அறிக்கை அனுப்பலாம்; ஆனால் அந்த அறிக்கை ஐயர் சொன்னபடி இருக்க வேண்டும்; அதற்காகக் கிடைக்கும் தொகையில் ஒரு பகுதியை அபிநவ பாரத சங்கத்துக்குத் தந்துவிட வேண்டும் என்று ஏற்பாடு செய்தார் ஐயர். பொய் அறிக்கை பெற்று ஏமாந்தனர் பிரிட்டிஷ் அதிகாரிகள்!

ஒருமுறை அய்யர் பயணம் செய்த கப்பலில் இருந்த ஒரு பிரிட்டிஷ் ஒற்றன், அவர்தான் ஐயரா என்றறிய ஒரு யுக்தி செய்தான். வி. வி. எஸ். ஐயர் என்று விலாசமிட்ட தந்தி ஒன்றை அவரிடம் நீட்டினான். ஐயர்

சற்றும் தயங்காமல், 'இது எனக்கல்லவே' என்றார். ஐயரது பெட்டியின் மேல் ''வி.வி.எஸ்'' என்ற எழுத்துக்கள் இருப்பதை அவன் சுட்டிக் காட்டினான். 'ஓ, அதுவா! நான் வீர் விக்கிரம சிங்!' என்று பஞ்சாபி சீக்கியராக நடித்தார் ஐயர். ஒற்றன் ஏமாந்தான்.

ஸாவர்க்கர் கைதானது பெரும் கிளர்ச்சியுண்டாக்கியது. ஹாலந்தில் தி ஹேக் என்ற நகரிலிருந்த சர்வதேச நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தனர் ஐயரும் மதாம் காமாவும். அது பலிக்கவில்லை.

இந்தியா போவதாகத் தீர்மானித்த ஐயர் அதற்கான முன்னேற்பாடுகளில் முனைந்தார். பார்ஸிக்காரர் வேஷம், முஸ்லிம் வேஷம் முதலிய வேடங்களுக்கான உடைகளையும், நடை உடை பாவனைகளையும் சீராகக் கற்றார். பிரேஸில் போவது போல் ஒரு தோற்றத்தை ஏற்படுத்த சாட்சியங்களைத் தயாரித்தார். புதுச்சேரி வந்து சேர்ந்தார். ஆண்டு 1910, அக்டோபர் மாதம்.

புதுவையில் கவி பாரதியாரும் அவரது ''இந்தியா'' பத்திரிகையின் அதிபரான மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியாரும் தங்களைக் காண வந்த முஸ்லிம் கனவான் வ. வே. ஸு. ஐயர் என்று அறிந்தபோது அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. லண்டனிலிருந்த சமயமே ஐயர் ''இந்தியா'' பத்திரிகைக்குவாரா வாரம் ஒரு லண்டன் கடிதமும், பிற விஷயங்களும் அனுப்பி வந்திருந்தார்.





புதுவை வந்த ஐயர், அங்கும் இளைஞர்களைப் புரட்சி வேலைகளில் பயில்விக்க முயன்றார். ''தர்மாலயம்'' என்ற நிறுவனமும் இலவசப் பத்திரிகையும் நடத்தினர். நீலகண்ட பிரம்மச்சாரி என்ற புரட்சி வீரரின் சீடரான வாஞ்சி ஐயர் என்பவரைக் கவர்ந்து ஆஷ் துரை என்ற கொடுங்கோல் அதிகாரியைச் சுட்டுக் கொல்லச் செய்தார் ஐயர்.

இதனால் புதுவையிலிருந்த தேச பக்தர்கள் மீது கெடுபிடிகள் அதிகமாயின. முக்கியமாக ஐயர்மீது கண்காணிப்பு மிகுந்திருந்தது. புதுவையிலிருந்த காலிகளைக் கொண்டு அவரைத் தூக்கிச் சென்றுவிடப் பல முயற்சிகள் நடந்தன. ஒரு சமயம் காலிகள் சூழ்ந்த வீட்டிலிருந்து ஒரு ''பிணம்'' எடுத்துச் செல்லப் பட்டது. பிணமல்ல, ஐயர்!

என்றும் அபாயம் சூழ்ந்திருந்த நிலையில், தமது அருமைத் தமிழகத்துக்குத் தமது நினைவாக மறக்கவொண்ணாத ஒரு செல்வத்தை விட்டுச் செல்லத் தீர்மானித்தார். திருவள்ளுவர் ஈந்த பொக்கிஷத்தை உயரிய ஆங்கில நடையில் மொழிபெயர்த்தளிக்கத் தீர்மானித்தார். இரவு பகலாக இதே வேலையாக முனைந்தார். நாலே மாதங்களில் புத்தகம் அச்சுக்குப் போகும் நிலையில் தயாராகி விட்டது. ஐயர் மனநிறைவுடன் பெருமூச்சு விட்டார்.

ஐயருடைய குறள் மொழிபெயர்ப்பு கம்பீரமானது. அதன் முகவுரை அறிஞர்க்கு விருந்து.

குறள் மொழிபெயர்ப்புக்குத் தொடர்ச்சியாக வ. வே. ஸு. ஐயர் வேறு பல இலக்கியப் பணிகளிலும் ஈடுபட்டார். ''குளத்தங்கரை அரசமரம்'' என்ற கதை காவியச் சிறப்புள்ளது. வரகனேரியிலுள்ள குளம் இதில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

முதல் மகா யுத்தம் 1918ல் முடிந்த பிறகு ஐயரும் பிற தேசபக்தர்களும் புதுவையிலிருந்து சென்னை திரும்பத் தடைகள் நீங்கின. ஐயர் சென்னைக்கு வந்து ''தேச பக்தன்'' என்ற தேசிய நாளிதழின் ஆசிரியரானார்.

அக்காலத்தில் ஐயர் பலாத்கார முயற்சிகளில் பற்று நீங்கின தூய காந்தியவாதியாக விளங்கினார். காங்கிரஸ் நடவடிக்கைகளிலும், கிலாபத் இயக்கத்திலும் ஐயர் பங்கு கொண்டார்.

ஐயர் வெளியூர் சென்றிருந்த சமயம் வேறு ஒருவர் எழுதி வெளியான ''தேச பக்தன்'' தலையங்கத்துக்காகப் பத்திரிகை மீது அரசாங்கம் வழக்குத் தொடுத்தது. பத்திரிகையில் வெளியாகும் விஷயங்களுக்கெல்லாம் ஆசிரியர் பொறுப்பு என்ற முறையில் ஐயர் ஒன்பது மாதம் சிறைத் தண்டனை அளிக்கப்பட்டார்.

சிறைச்சாலையில் கிடைக்கும் ஓய்வைப் பயனுள்ள வழியில் கழிக்கத் திட்டமிட்டார் ஐயர்.



வடமொழியும் ஆங்கிலமும் லத்தீனும் பிற மொழிகளும் அறிந்த ஐயர், அம்மொழிகளின் மிக்குயர் கவிகளைச் சுவைத்த ஐயர், உலகின் மிகச் சிறந்த மகாகவி கம்பனே என்றும், கம்பராமாயணத்துக்கு இணையான காவியம் இல்லை, வால்மீகியின் இராமாயணத்தையும் அது விஞ்சி விட்டது என்றும் உறுதியாக நம்பினார்.

அத்தகைய அருமைக் கம்பனது கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து, அவனுடைய காவியத்தின் இணையற்ற கீர்த்தியைத் தற்கால இலக்கிய விமர்சன ரீதியில் உலக அரங்கில் நிலைநாட்டும்நூல் ஒன்று எழுத முனைந்தார் ஐயர். ஒன்பது மாதங்களுக்குள் 1,40,000 சொற்கள் கொண்ட ஆங்கில நூல் உருவாகி விட்டது. (Kamba Ramayanam - A Study) ஐயரின் மறைவுக்குப் பின் வெளியான இந்நூல், தமிழ்க்கவிச் சக்கரவர்த்தியின் புகழை உலகெங்கும் பறைசாற்றுகிறது.

சிறையிலிருந்து வெளிவந்த ஐயர், பத்திரிகை உலகைத் துறந்தார். பாரத நாடெங்கும் சுற்றுப் பயணம் செய்து வந்தார். காசியில் அவர் ஒரு சபதம் செய்துகொண்டார். நாளந்தா, தக்ஷசீலம் ஆகிய முற்காலப் புகழ் மிகு கல்வி நிலையங்களைப் போல இக்காலத்தில் ஒரு குருகுலம் தமிழ் நாட்டில் அமைப்பதென உறுதி பூண்டார். இதற்கென ஏழை எளியவரிடமும் தனிகர்களிடமும் தொகை வசூல் செய்தார். திருநெல்வேலி ஜில்லாவில் சேரன்மாதேவி என்ற ஊரில் ஐயர்கண்ட ஓரிடம் அவர் மனத்தைக் கவர்ந்தது; அங்கே தமிழ்க் குருகுலம் நிறுவினார் ஐயர்.

பாபநாசம் அருவியைக் காணக் குருகுல மாணவர்களை அழைத்துச் சென்ற ஐயர் தமது புதல்வி கால் தவறி அருவியில் விழ, அவளைக் காப்பதற்காக அருவியில் குதித்தார். ஐயரும் புதல்வியும் அருவிக்கு இரையாயினர்.

வ. வே. ஸு. ஐயர் நாட்டுக்காகச் சகல சுக போகங்களையும் துறந்து, வறுமையை மேற்கொண்ட தேசபக்தர். இலக்கியத்துக்கு அவர் ஆற்றியுள்ள பணிகள் இணையற்றவை. சிறு கதையில் ஐயர் வழிகாட்டியாக விளங்கினார். அவரது மறைவைக் கேள்வியுற்ற காந்தியடிகள், ''விடாப் பிடிவாதத்துடன் தேசத் தொண்டு செய்த உண்மை ஊழியர் மறைந்தார்'' என வருந்தினர்.

# THE CHIP

'மினி'யுக கதாநாயகன் யார் தெரியுமா? 'சிப்' (Chip) என்ற நாமம் தரித்தவர்தான்! இக்கதாநாயகன் உருவிலும் வலுவிலும் வாமனரையும் மிஞ்சுபவர்! இவருடைய 'மைக்ரோ' அங்க வர்ணனையும், 'மாக்ரோ' அண்டபிரண்ட திறனையும் பல உதாரணங்களால் விளக்கலாம். மாதிரிக்கு இதோ ஒன்று: ஒரு சென்டிமீட்டர் விட்டமும், பத்தில் ஒன்று மில்லி மீட்டர் கனமும் உள்ள ஒரு மெல்லிய காகிதத் துண்டை நினைத்துக் கொள்ளுங்கள். இதற்குள் சுமார் 1000 பாகங்கள் கொண்ட ஒரு சிறு 'கம்ப்யூட்டர்' மூளையே அடக்கம்! இதனால் சுமார் 2000க்கு மேற்பட்ட 'ஆணை'களை நொடியின் விகுதியில் செய்ய முடியும்!

ஒரு மிகச்சிறிய சிலிகான் படிவத்தில் பல விதப்பட்ட பாகங்களை வகை வகையான வேலை நுணுக்கங்களால் இணைத்து (Large Scale Integration) உருவாக்கப்படும் இந்த 'சிப்' நாளொரு வண்ணமாக உரு சிறுத்து, வலிமையில் வளர்ந்து வந்த போதிலும், கதாநாயகரின் 'ரேட்' மட்டும் குறைந்து கொண்டே தான் வருகிறது!

- சந்திரசேகரன்





'மினி'யுக கதாநாயகன்







# க்ளியர்டோன் தரச்சிறப்பு. ராலிஸ் நம்பகத்தன்மை.

இரண்டும் இணைந்து இஸ்திரி போடும் வேலைப்பளுவை அகற்றுகின்றன.

**க்வீன்** ஆட்டோமாட்டிக் இஸ்திரி பெட்டி



எடை 2.75 கிலோ கிராம். கைப்பிடியின் முன்புறத்தில் தெர்மோஸ்டடிக் ரெகுலேட்டரும் நீடில் இண்டிகேட்டரும் அமைக்கப் பட்டுள்ளன. பைலட் விளக்கு 750 W, 230 V, ஏ.ஸி அல்லது ஏ.ஸி/டி.ஸி.

தவிரவும், தேர்ந்தெடுக்க வசதியாக, கவர்ச்சிமிக்க இன்னும் ஐந்து மாடல்கள்: கோவர் (ஆட்டோமாட்டிக்), இம்பீரியல் (ஆட்டோமாட்டிக்), பாப்புலர், ஸீனியர், டிலைட்.

"அயராதுழைக்கிறது எனது ராலீ க்ளியர்டோன் இஸ்திரி பெட்டி ...ஆகவே எனக்கு வேலை மிச்சம்!"



## ராலீ க்ளியர்டோன்

புதிய இணைவு பொன்னான விளைவு!

ULKA-RK-5 TAM




# 5 NEW STARS FROM MAKERS OF MERCURY PENCILS

with reinforced lead for longer use and better writing comfort for students of all age groups, and business executives.



**MPF**

**THE MADRAS PENCIL FACTORY**
15, Stringers Street,
Madras 600 001.

ADWAVE/MPF/1310E






"**ரா**மாயி வயசுக்கு வந்துட்டா. கல்யாணம் ஆகணும். சரடு தயார். தங்கம் எங்கே?'' என்று தமிழ் நாடெங்கும் சுவர்களில் கேள்விகள் பொறிக்கப்பட்டிருந்தன. அவைகளை உருவாக்கியவர்கள் எம். ஜி. ஆரின் கூட்டணியினர்.

எய்த அம்பு திரும்பி எய்தவரையே துரத்தலாயிற்று. 1980ம் ஆண்டில் நடந்த லோக சபைத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ்-தி. மு. க. கூட்டு தங்கப் புரளியைக் கிளப்பிற்று. அந்தப் புரளி பஸ்மாசுரனைப் போலக் கிளப்பியவர்களை அச்சுறுத்தியது.

ராமாயிக்குத் தங்கம் தயார் செய்வது அவளது பெற்றோரின் கவலை என்று சொல்லித் தட்டிக் கழிக்க முடியாது. தங்கத்தின் விலை உயர்வு ஜனதா அரசின் தங்க ஏலத்தால் ஏற்பட்டது என்று இந்திரா காங்கிரஸ் தமுக்கடித்தது. இந்தக் குற்றச்சாட்டு அபத்தம் என்பது உச்ச மட்டத்தில் இருப்பவர்களுக்குத் தெரியும். அப்படியும் அவர்கள் அதைத் திரும்பத் திரும்பச் சொன்னார்கள்.

தங்கத்தின் கதை என்ன? அது வெகுவாக நாடப்படும் உலோகம். நாணயச் செலாவணிக்குத் தகுந்த பாதுகாப்பு இல்லாத நாட்களில் தங்கத்தில் பணத்தைப் போட்ட நம் முன்னோர்கள் மடையர்கள் அல்ல. ரூபாய் மதிப்புக் குறையலாம்; ஆனால் தங்கத்தின் மதிப்புக் குறையாது என்பது அவர்களுக்குத் தெரியும்.

இதனால்தான் தங்கம் பல நாடுகளில் 1930 வரை நாணய முறைக்குப் பாதுகாப்பாக இருந்தது. தங்கத்தின் விலை உயர உயர இந்த முறை கைவிடப்பட்டது. Gold Standard ஒழிந்து பல பத்தாண்டுகளாகி விட்டன.

அமெரிக்காவில் மட்டும் இந்தப் பாதுகாப்பு முறை இருந்தது. ஒரு அவுன்ஸின் விலை 35 டாலர் என்று அந்த நாடு நிர்ணயித்திருந்தது. அதாவது 35 டாலரைச் செலுத்தினால் ஒரு அமெரிக்கப் பிரஜைக்கு ஒரு அவுன்ஸ் தங்கம் கொடுக்கப்பட வேண்டும். நாக்ஸ் கோட்டை (Fort Knox) என்ற இடத்தில் தங்க செங்கற்கள் வியட்நாம் போரில் அமெரிக்கா அகப்பட்டு அவதிப்படும்வரை அபரிமிதமாக இருந்தது. வியட்நாம் போர் கணிசமாகச் செலவை உண்டாக்கியதால் கப்பல் கப்பலாகத் தங்கம் மற்ற சப்ளை செய்த நாடுகளுக்கு அனுப்ப வேண்டியதாயிற்று.

அமெரிக்காவில் தங்க இருப்பு 2000 கோடி டாலர்கள். அது 1200 கோடிகளுக்குக் குறைந்ததும் ஜனாதிபதி நிக்ஸன் தங்கப் பாதுகாப்பைக் கைவிட்டார். இன்று ஒரு அவுன்ஸ் தங்கம் 35 டாலர் அல்ல. 350 டாலர்.

தங்கம் இன்று ஐரோப்பிய நாடுகளில் உள்ள பெரும் பணம் படைத்தவர்களின் சூதாட்டக் காயாகி விட்டது. விற்று வாங்குவதில் தினம் பல கோடிகள் கைமாறுகின்றன.

தங்கம் தென் ஆப்பிரிக்கா அல்லது ரஷ்யாவிடம் அதிகம் உண்டு. அடுத்தபடி எண்ணெய் உற்பத்தி நாடுகளிடம் உண்டு. தங்கத்தின் சர்வ தேச விலையை இன்று யாராலும் கட்டுப்படுத்த முடியாது.

ஜனதா அரசு நடத்தல் தங்க ஏலம் மூலம் விலை குறையும் என்று எதிர்பார்த்தது. இது தவறான எதிர்பார்ப்பு. ஆனால் இதைப் பிரச்னையாக்கித் தேர்தலில் அள்ளி வீசியது அயோக்கியத்தனம். மக்களை ஏமாற்றும் செப்பிடுவித்தை. எந்த அரசும் தங்கத்தின் விலையைக் குறைக்காது. குறைந்த விலையில் தாலிக்குக் கொடுப்பது என்பது கூட சாத்தியமில்லை.

---

காசையோ நோட்டையோ எண்ணிக் கொடுக்கும் போது ஞாபகமாக வாழ்த்திக் கொடுங்கள். அதனிடம் சொல்லுங்கள்: "செல்வமே! யார் உன்னைத் தொட்டாலும் அவர்களுக்கு நன்மை செய்வாயாக. போய்ப் பசித்தவர்களின் பசியைத் தணித்து, துணியில்லாதவர்களுக்கு ஆடை அணிவித்துப் பன்மடங்காகப் பல்கிப் பெருகி என்னிடம் திரும்பி வருவாயாக.''

-அல் கொரான்

-பிரியா பாஜு

---





# நட்சத்திர வடிவம்
## பரிசுத்திட்டம்-10

இங்கு உள்ள துண்டங்களை ஜாக்கிரதை யாக ஓரத்தையொட்டிக் கத்தரிக்கவும். அவற்றை மேலும் பின்னப்படுத்தக் கூடாது. ஒரு வெள்ளைத் தாளில் இணைசேர்த்து ஒட்டித் திரைப்பட நட்சத்திரத்தின் உருவை முழுமை யாக நீள்சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக் கும் தலா ரூ. 25 பரிசு உண்டு. தவிர அந்தத் திரைப்பட நட்சத்திரத்தின் கையெழுத்துடன் கூடிய புகைப் படமும் அனுப்பி வைக்கப் படும். முடிவு தேதியான ஜூலை 14 தேதிக் குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப் படும். உறையின் மேல் 'நட்சத்திரவடிவம்-10' என்று குறிப்பிடவும். கடிதப் போக்கு வரத் துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளி வாக, ஒட்டப்பட்ட படத்தின் கீழே குறிப்பிட மறவாதீர்கள்!

—ஆசிரியர் கல்கி, சென்னை-32











# வட்டமேஜை



● எம். ஜி. ஆர். அவர்களின் மாசுமறுவற்ற திருமுகத்தைக் 'கல்கி' அட்டைப் படமாக வெளியிட்டு எங்களை மகிழ்ச்சியில் திளைக்க வைத்துவிட்டீர்கள்.

தென் எலப்பாக்கம் — எஸ். எஸ். வாசன்

● 15-6-80 இதழில் எம். ஜி. ஆர். வெற்றியைப் பற்றியும், ஹண்டே அவர்களின் தோல்வியைப் பற்றியும் கருணாநிதி அவர்களின் வெற்றியைப் பற்றியும் அவரது பிறந்த நாள் கடற்கரை உரையைப் பற்றியும் பாரபட்சம் காட்டாமல் சிறந்த முறையில் எழுதியிருப்பது என்போன்றோரின் மனத்துக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. தாங்கள் இவ்வளவு நடுநிலையில் இருந்து எழுதுவீர்கள் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

புளிவலம் — கு. பஞ்சாபகேசன், திராவிடர் கழகம்

● வெற்றிக்கும் தோல்விக்கும் ஒருசேர வாழ்த்துத் தெரிவித்த சாமர்த்தியத்தைப் பாராட்டுகிறேன். அதே வேளையில் ஹண்டே போடப் போகும் வழக்கைப் போட வேண்டாம் என்று வலியுறுத்துமிடத்திலும் அதற்காகச் சொல்லப்பட்ட காரணத்திலும் பிசிறடிப்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

பெங்களூர்-5 — ஆர். எஸ். சாவித்திரி

● அட்டைப் பட விளக்கத்தைப் படித்த பின்னர் தாங்கள் எம். ஜி. ஆரின் அடிமையாக இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு மகிழ்ச்சி யடைகிறேன்.

பட்டுக்கோட்டை — எஸ். சிவகுருநாதன்

● தலையங்கத்தில் சோதனை காலத்தில் இலக்கியவாதி எப்படிப் பேசுவார் என்பதைக் கோடிட்டுக் காட்டிக் கலைஞரைப் பாராட்டிய விதம் உங்களின் பெருந்தன்மைக்கு ஒரு சிறந்த உதாரணம்.

திருச்சி-12 — விக்டர் ஆல்பர்ட்

● கலைஞரின் கடற்கரைப் பேச்சினைப் புகழ்வது போல் புகழ்ந்து, கடைசியில் தங்களுக்கே உரித்தான வஞ்சக நஞ்சினைக் கக்கி விட்டீர்கள்.

தாம்பரம் — அன்பு நாரணன்

● தலையங்கத்தில் 'என் ஆட்சி காலத்தில் நடந்த தவறுகளுக்கு மக்களின் மன்னிப்பைக் கோருகிறேன்' என்று கருணாநிதியின் வாயால் வரவேண்டும் என்று எழுதியிருப்பது நூற்றுக்கு நூறு சரியே. மக்களும் அதைத்தான் எதிர்பார்க்கிறார்கள்.

சென்னை-33 — திருமதி பிரேமா குமார்

● தலையங்கத்தில் கலைஞரைத் திருடனாகக் கூட இருக்கலாம் என்று எழுதியுள்ளீர்கள். தேர்தலில் கழகம் தோல்வியடைந்ததைக் காட்டிலும் நீங்கள் இவ்வாறு எழுதியிருப்பதே ஆழ்ந்த மன வருத்தத்தைத் தருகிறது.

மதுரை-1 — பா. சொ. ராஜா

● ''துப்பறியும் அதிகாரியும் திருடனும் ஒன்றாகக் கம்பெனி நடத்த முடியுமா?'' என்று பதில் கூறியதில் திரு எம். ஜி. ஆர். உயர்நிலையில் இருந்து கீழ் இறங்குவதாகக் கூறியிருக்கிறீர்கள். எந்த வகையில் எம். ஜி. ஆர். கீழ்நிலை ஆனார்? உண்மைகளைப் பளிச்சென்று கூறி நிற்பதற்குத் தகுதி வேண்டும். அந்தத் தகுதி எம். ஜி. ஆருக்கு உண்டு.

காயாமொழி — சோ. விஜயசிங்

● ஆயிரம் விளக்கில் 307 வாக்குகள் வித்தியாசத்திலும் வில்லிவாக்கத்தில் 703 வாக்குகள் வித்தியாசத்திலும் வெற்றி பெற்ற கே. ஏ. கிருஷ்ணசாமி, ஜே. சி. டி. பிரபாகரன் இவர்களின் வெற்றி வெற்றியல்ல; அவர்களை எதிர்த்து எஸ். ஜே. சாதிக்பாட்சாவும், க. சுப்புவும் கண்ட தோல்வி தோல்வியல்ல என்று ஒப்புக் கொள்கிறீர்களா?

சென்னை-92 — கருணாப்ரியா

● இந்திராவுக்குக் கலைஞர் ''கூழைக் கும்பிடு'' போடும் அளவுக்கு எங்கள் கலைஞர் இன்னும் மோசமாகப் போய்விடவில்லை. ஆட்சியைப் பிடித்தும்கூட எம். ஜி. ஆர். கூழைக் கும்பிடு போட்டதுதான் நியாயம் இல்லை. கலைஞரை தாக்கிக் கார்ட்டூன் வரைவதாக நினைத்துக் கொண்டு எம். ஜி. ஆரைத் தாக்கி கார்ட்டூன் வரைந்துவிட்டீரே சபாஷ்.

வேலூர் (சேலம்) — இமயவரம்பன்

தமிழக முதல்வருடன் நெருங்கிய உறவு கொள்ளப் பிரதமர் முயல்வார் என்பதைத் தெளிவாகப் படம் பிடித்திருக்கிறார் கார்ட்டூனிஸ்ட்.

சென்னை — வா. ரா. சுந்தரராஜன்

● என்ன ஓய் செம்பியரே...! பேத்தி வயதாகும் நடிகைகளோடு கூத்தடிக்கும் ஒரு தாத்தா நடிகர் அரசாள்வதற்கு வெண் சாமரம் வீசுகிறீர்கள்! காலமெல்லாம் தேச விடுதலைக்கும் மக்கள் நலனுக்காகவும் தங்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தியாகம் செய்த ஓர் உயர்ந்த குடும்பத்தின் வாரிசு ஆட்சிக்கு வருவதை அணைகட்டித் தடுப்பீர்கள்! உங்கள் 'வாசிப்பில்' நடுநிலைமைத் தன்மையை விட இந்திராவின்பால் கொண்ட வெறுப்புணர்வுதான் மிகுதியாகத் தென்படுகிறது.

வேலாயுதம்பாளையம் — எம். சம்பத்

● செம்பியன் வாசித்த செய்திகளில் முதல் செய்தி உண்மையில் தோய்த்தெடுக்கப்பட்ட ஒன்றாகும். வஞ்சகப் புகழ்ச்சியணிக்கு ஒரு நல்ல உதாரணம்.

ஒவ்வொரு வாக்கியமும் ஒவ்வொரு முன். மிரட்டப் படலாம். ஜாக்கிரதை.

சென்னை-33 — எம். ஆர். சத்ய நாராயணன்

டெலிபோன் சிணுங்கியது. அவளாகத் தான் இருக்க வேண்டும். எடுக்கிறேன்.

''ராஜா... டியர்...''

''யூ....ஸ்கௌன்ட்ரல் -யூ... இடியட்... சீட்...''

மூன்று வார்த்தைகளோடு நிறுத்திக் கொண்டாள். நிறுத்தியதற்குக் காரணமாகச் சில விசும்பல்கள் என் செவிப்பறையை ஒரு 'ரித'த்துடன் தடவுகின்றன.

''அவ்வளவுதானா? உன்னுடைய இங்லீஷ் நாலட்ஜ்? திட்டுவதற்கு வார்த்தைகள் வேணுமின்னு சொல்றேன் ராஜீ... நோட் தெம் ப்ளீஸ்....''

''யூ.... பாஸ்டர்ட்... மூடுடா வாயை. 'ராஜீ என்னை நம்பு... நிச்சயம் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கறேன்னு' ப்ராமிஸ் பண்ணி எங்கெல்லாமோ அழைச்சிட்டுப் போய்க் கடைசியிலே....''

''முடிச்சுடு ராஜீ. வனிதைகள் நட்பை மட்டுமல்ல.... வார்த்தைகளையும் பாதியிலே நிறுத்தறது எனக்குப் பிடிக்காது....''

''கடைசியிலே என்னைக் கைவிட்டு விட்டாயே....''

''ஒரு சின்ன கரெக்ஷன். என்னையும் கைவிட்டு விட்டாயேன்னு சொல்லு.''

''அப்போ உன்னிடம் ஏமாந்த பெண்களோட லிஸ்ட்டே வைத்திருக்கிறயா....''

''நோ....நோ.. ஒரு லெட்ஜரே வைச்சிருக்கேன். விருப்பமிருந்தா சொல்லு.. உனக்குப் படிச்சிக் காட்டுறேன்.''

''டேய். என்னோட பாவம் உன்னைச் சும்மா விடாது.''

''இப்படி 'ஜெனரலா' சொல்றது எனக்குப் பிடிக்காது. ராஜீ என் பாவம் என்ன செய்யும்னு 'ஸ்பெஸிஃபிக்கா' சொல்லு. என்னுடன் பழகின பிறகு நான் 'கட்' பண்ணி விடற ஒவ்வொருத்தியும் 'பெண் பாவம் பொல்லாதுடா... பொல்லாதுடா'ன்னு சொல்ரு... அதோட அர்த்தம் தான் புரியலே. அட்லீஸ்ட் நீயாவது சொல்லக் கூடாதா... ப்ளீஸ்.. டெல்.... டு...''

''அர்த்தமாடா வேணும் அர்த்தம்.. ஒரு பெண்ணாலே ஒரு நகரமே எரிஞ்ச சாம்பலாச்சுடா.''

''யூ.... மீன்... கண்ணகி ஆஃப் சிலப்பதிகாரம். வெரிகுட் ராஜீ. தன்னைக் கைவிட்டதற்காகக் கோவலனை எரிக்காத கண்ணகி மதுரையைத்தான் எரித்தாள். அதுமாதிரி நீ என்னை எரிக்காமல், நீயும் நானும் ஒரு வாரம் தங்கின மகாபலிபுரம் லாட்ஜின் ஆறும் நம்பர் ''டபுள் ரூமை'' எரிச்சுடேன்.''

''டேய்.... நாளைக்கு இந்நேரம் என்பிணம் தான் எரிஞ்சுட்டு இருக்கும்டா.''

''தேங்க்...யூ...ராஜீ. அப்போ நாளைக்கு மறு தினத்திலிருந்து உன்னோட தொந்தரவு இருக்காது. அழுகை இருக்காது. கண்ணீர் இருக்காது. ஆறு ஒரே ஒரு குறை. என் லெட்ஜரில் ஒரு வரியைச் சிகப்பு மையாலே அடிக்கணும். பரவாயில்லே. இன்னொன்றை 'ஆட்' பண்ணிக்கிறேன். ஆமாம், நாளைக்கு என் பிணம்தான் எரியும்னு சொல்றியே, எப்படி சாகப் போறே?''

''எதுக்காகக் கேட்கிறே?''





நீலக்கண்ணாடி சரியில்லை என்றால் முகம் நீண்டு அல்லது குறுகித் தெரியும். காமிராவி லேயே ஒரு ரக லென்ஸைப் பொருத்தி விட்டால் முகத்தைக் கோணலாக்கிக் காட்டலாம். திரைப் படங்களில் வில்லனின் உள்மன விகாரத்தைக் காட்ட இப்படி உருவகக் காட்சி எடுப்பதுண்டு தமாஷாக இத்தகைய விளையாட்டில் இங்கு ஈடுபடுகிறவர்கள் கமலஹாசன், இயக்குனர் ஐ. வி. சசி. படமெடுப்பவர் மோனலிசா. சரி, இவர் எடுத்த படம் எப்படி இருக்கும்?

57ம் பக்கம் பார்க்க

---

''ஏதோ என்னாலான உதவி ஏதாவது செய்யலாமேன்னுதான்.''

''நான் சாகப் போறதுக்குக் காரணமே நீ தானடா....''

''அதுக்காகத்தான் சொல்றேன். உன்னைக் கொலை பண்ணணுமா. சொல்லு. முடிஞ்சா நானே அதைச் செய்றேன். இல்லே ஆளை விட்டுச் செய்யச் சொல்றேன். எதுக்கு வம்பு. பேசாம தற்கொலை பண்ணிடேன்.''

''அதைத்தாண்டா இப்போ செய்யப் போறேன்.''

''உண்மையாகவா....?''

''எஸ்....''

''ராஜீ. நீ இப்போ எங்கிருந்து பேசறே.''

''என்னோட பங்களாவிலிருந்து...''

''உன்னோட டாடி அண்ட் மம்மி?''

''பெங்களூர் போயிருக்காங்க..'.'

''வேலைக்காரி....?''

''வீட்டுக்குப் போயிட்டா....''

''ஸோ.... நீமட்டும் ஸோலோவாக?''

''எஸ்....''

''ராஜீ. ஒரு அஞ்சு நிமிஷம் வெயிட் பண்ணு. ஒரு பெண் எப்படித் தற்கொலை பண்ணிக்கிறான்னு பார்க்க ரொம்ப நாளா எனக்கொரு ஆசை. போறதோபோறே. என்னோட அந்த ஆசையையும் நிறைவேற்றி விட்டுப் போயேன். பை....த....யை... நான் வரும் போது கயிறு... விஷம்... ஏதாவது வாங்கிட்டு வரணுமா?''

''அவசியமே இல்லே. நான் ஏற்கனவே ஏற்பாடு பண்ணிட்டேன்.''

''ஸோ.... ப்ளீஸ்.... வெயிட் ஃபார் மீ.''

டெலிபோனைத் துண்டிக்கிறேன். மாடிப் படிகளைப் பின்னுக்குத் தள்ளி புல்லட்டை உதைக்கிறேன்.

**ரா**ஜீயின் பங்களா.

வெளிக் கம்பிக் கதவுகள் திறந்தே இருக்கின்றன. புல்லட்டைச் சீற விடுகிறேன். பூச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றும் ஹோஸ் பைப்பில் வழிந்த நீர் வாசற்புறத்தில் நச நசத்துக் கொண்டிருக்கிறது.

கதவில் விரல் பதிக்கிறேன். பஸ்ஸரை அழுத்துகிறேன். ராஜீ கதவைத் திறந்தாள்.

''வாடா....''

''வந்தேன் ராஜீ....''

''உட்கார்....''

சோபாவைச் சுட்டிக் காட்டுகிறாள். சிகப்பு கம்பளம் போர்த்திய ஸோபா. ஒரு நாள் மதியம் அதைப் படுக்கையாக மாற்றிய நினைவில் கிளுகிளுப்பு... சோபாவில் அமர்கிறேன்.

வீட்டின் உள்ளே சென்ற அவள், ஒரு பீங்கான் தட்டில் இரண்டு பெரிய கேக்குகளை வெட்டித் துண்டுகளாக்கி எடுத்து வருகிறாள்.

''என்ன விசேஷம் ராஜீ. கேக்கெல்லாம் எடுத்து வர்றே.''

''எனக்கு இன்னைக்கு பர்த்டேடா.''

''இஸ் இட்? பிறந்த தினத்தன்று சாகறதுக்கு ஏதாவது புண்ணியம் பண்ணியிருக்கணும் ராஜீ.''

கேக் துண்டுகள் நிரம்பிய தட்டை டீபாயின் மீது வைத்துவிட்டு ப்ரிஜ்ஜைத் திறந்து ஒரு டம்ளர் ஐஸ் வாட்டர் எடுத்துவருகிறாள்.

கடைசியாக ஜாக்கெட்டினுள்ளிருந்து ஒரு சிறு பொட்டலத்தை வெளியே எடுக்கிறாள். பிரிக்கிறாள்.

''அது என்ன ராஜீ?''

''துத்தநாகம்.''

''அப்படீன்னா...?''

''காப்பர் ஸல்பேட்... சியு எஸ்ஓ ஃபோர்''
(Cuso 4)

''உனக்கு எப்படிக் கிடைச்சது...?''

''காலேஜ் 'லாபி'லிருந்து எடுத்து வந்தேன்.''

''ஒன் மினிட் ராஜீ... உன்னுடைய தற்கொலை பற்றி ஏதாவது கடிதம்?''

''பயப்படாதே. என் சாவுக்கு யாரும் காரணமில்லேன்னு எழுதிய கடிதத்தை இதோ ஜாக்கெட்டில் சொருகி வைத்திருக்கிறேன்.''

சொல்லி முடிக்குமுன்பே துத்தநாகத் துருவல்களை வாய்க்குள் அமிழ்க்கிறாள். ஒன்றிரண்டு கேக் துண்டுகளை வேகமாக விழுங்குகிறாள். தண்ணீரைக் குடிக்கிறாள்.

நான் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொள்கிறேன். அதன் முதல் இழுப்பை வெளியிடும் போது அவள் என்னை நேருக்கு நேர் பார்க்கிறாள். ஏதோ ஒரு இமாலய வெற்றியை அடைந்து விட்டது போல் ஒளிரும் அந்த விழிகளின் ஆழத்தில் நெஞ்சைக் குத்துகின்ற பயங்கரம்....

அவள் முகத்தில் ஊன்றிக் கிடந்த என் விழிகளை அகற்ற வேண்டி முனங்கிக் கொண்டிருக்கும் ப்ரிஜ்ஜின் மீது திருப்புகிறேன்.

இதுவரை நாற்காலியின் விளிம்பில் அமர்ந்திருந்த அவள் இப்போது துவண்டு சரிகிறாள். அவளது தலை நாற்பத்தைந்து டிகிரியில் சரிகிறது. கரங்கள் நாற்காலியின் இருபுறமும் ஊசலாடிக் கொள்ளத் தொடங்கும் போது முந்தானை நழுவுகிறது.

துத்தநாகத் துருவல்கள் வயிற்றுக்குள் துவாரமிடத் தொடங்கி விட்டன என்பதை

அவன் முகபாவம் காட்டத் தொடங்குகிறது. வயிற்றுக்குள் இறங்காமல் அவள் உதட்டோரங்களில் ஒட்டிக் கொண்டிருந்த துருவல்சன் நீரில் புள்ளிகளாக ஜொலித்துக் கொண்டிருக்கின்றன.

திடீரென்று நாற்காலியிலிருந்து துள்ளி விழுகிறாள். வயிற்றை இறுகப் பிடித்துக் கொண்டு தரையில் உருள்கிறாள். அவனையும் மீறி அவள் வாயிலிருந்து வழியும் நீலநிற நீர்ச் சிதறல்கள் 'மொசைக்' தரையில் படர்கின்றன.

என் விரல் இடுக்குகளில் கசிந்து கொண்டிருந்த சிகரெட்டைக் கடைசி முறையாக உறிஞ்சும் போது அவள் முகம் ஓர் ஆவேசத்தோடு என் பக்கம் திரும்பி....

''திருப்தி தானே....''

''எஸ்....''

அவள் தலைசாய்கிறது. மறக்க முடியா அனுபவத்தைப் பெற்ற மகிழ்ச்சியுடன் வெளியேறுகிறேன்.

அன்று இரவு......

ஸ்டீரியோவில் நான்ஸி சினிட்ரா சுழன்று கொண்டிருக்க 'ட்ரிபின் எக்ஸைக்' கண்ணாடிக் குவளைக்குள் சரித்துக் கொண்டிருக்கும் போது.....

பஸ்ஸர் முனங்குகிறது. கதவைத் திறக்கிறேன். போலீஸ்.

''மிஸ்டர் ராஜா...?''

''யெஸ்.... நான்தான்....''

''உங்களை கைது செய்ய வந்திருக்கிறோம்.''

''எதற்காக...?''

''ராஜி என்ற பெண்ணைக் கொலை செய்ததற்காக.''

''இன்ஸ்பெக்டர்! வாட் டு யூ மீன்...?''

இன்ஸ்பெக்டரின் வலது கரம் ஒரு சிறு கடிதத்தை என்முன் நீட்டுகிறது....

''இறந்து போன ராஜியின் ஜாக்கெட்டிலிருந்து எடுக்கப்பட்ட கடிதம் இது...''

அதை வாங்கிப் பிரித்த போது...



''நேற்றிரவு ஒரு கெட்ட சொப்பனம் கண்டேன்.''

''என்ன கனவு?''

''லாட்டரியில் எனக்குப் பத்து லட்ச ரூபாய் விழுகிறது...''

''அது எப்படி கெட்ட கனவாகும்?''

''அத்தனை பணத்தையும் நீயே எடுத்துக் கொள்கிறாய்...''

---

''போலீசுக்கு....

என் காதலன் ராஜா எனக்கு ஊட்டிய பிறந்த நாள் கேக் — சாப்பிட்டேன் — தலைசுற்றல் — என் இறப்புக்கு அவனே — அவனே — காரண........ராஜி.

''இன்ஸ்பெக்டர் ... இந்தக் கடிதத்தை மட்டும் வைத்துக் கொண்டு....''

''இல்லை. ராஜி வீட்டு பஸ்ஸரில் பதிந்துள்ள சில ரேகைகள், அவள் வீட்டு பங்களாவின் வெளிப்புறத்தில் தடம் பதித்துள்ள மோட்டார் சைக்கிள் டயர் சின்னங்கள்... சில சிகரெட் துண்டுகள்... இவையும் சாட்சி சொல்லப் போகின்றன... கமான்... கைகளை நீட்டுங்கள்....''

வளைக்கரங்களைப் பற்றி வருடிய பின்னர் கைகழுவும் என் கரங்களை இரும்பு வளையங்கள் [illegible] போது — ஒரு கண்ணகியால் மது[illegible]த்திருக்க முடியும் என்ற நம்பிக்கையும் — பெண் பாவம் எதுவும் செய்ய[illegible] [illegible]ம் [illegible]க்குள் தோன்றின.

---

# நட்சத்திர வடிவம்

## பரிசுத்திட்டம் போட்டி முடிவு—5

ராஜ்குமாரின் முழு உருவத்தையும் சரியானபடி ஒட்டி அனுப்பியவர் மூன்று பேர்களே.

(1) எம். கே. விசுவநாதன், மே. பா. க்ராஃபோர்டு பெய்லே கம்பெனி, ஸ்டேட் பாங்கு கட்டிடம், பாங்கு தெரு, பம்பாய்-400.023. (2) கே. ரமணி, 27, அக்பரா பாத் முதல் தெரு, கோடம்பாக்கம், சென்னை 600.024. (3) குமாரி எம். எஸ். இனி, 144, பெடரியார் கோயில் தெரு, சென்னை 600.001.

மிஞ்சும் தொகை ரூ. 175.

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள மொத்தத் தொகை ரூ. 850.

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப் படங்கள் 34.

ஆசிரியர்: கல்கி

புகைப்படம்: ஏ. சுந்தரம்





## 12

கல்லூரியை விட்டு வெளியே வந்த உமா சிறிது தூரம் நடந்து சென்று இரண்டு பஸ் ஸ்டாப்புகள் தாண்டி மூன்றாவது ஸ்டாப் புக்கருகில் நின்று கொண்டாள். பிரகாஷின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு காத் திருந்தாள்.

அவள் வெகு நேரம் காத்திருக்க வேண் டிய தேவை ஏற்படவில்லை. அங்கே வந்து நின்றுகொண்ட சில நிமிடங்களுக்குள்ளாக பிரகாஷ் தனது 'புல்லட்' படபடக்க அவள் அருகே வந்து நின்று புன்னகைத்தான். உமா வும் பதிலுக்கு முறுவலித்தபடியே பின் சீட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

''எங்கே போகட்டும் உமா?''

''எனிவேர் யூ லைக்.''

''ஓ.கே.''

பிரகாஷின் வலது தோள் மீது கையை வைத்து அழுத்தியபடி, கடற்கரைச் சாலை யில் மென் காற்று உடலைத் தழுவ, தவழ்ந்து செல்வது போல் மோட்டார் சைக்கிளில் உட்கார்ந்து செல்வது சுகமான அநுபவ மாக இருந்தது. அவ்வாறு அவனுடன் அவள் செல்வது புது அனுபவம் ஒன்றும் இல்லா விட்டாலும், இன்று அவளுக்கு ஒரு வகையில் அவனோடு மேலும் நெருக்கம் ஏற்பட்டுவிட்ட தாக ஓர் உணர்வு அவளுக்குள் தோன்றி யிருந்தது. காரணம், இத்தனை நாட்களும் அவர்கள் உறவு ரகசியமாக, தன் குடும் பத்தினருக்குத் தெரியாததாக இருந்தது. இன்றும், பிரகாஷைப் பற்றிய விவரங்களைத் தன் வீட்டாருக்குச் சொல்லா விட்டாலும், அப்படி ஒருவன் இருக்கிறான் என்பதைச் சொல்லி, அவர்கள் அதை அங்கீகரித்து விட்டதையும் நினைக்கும்பொழுது பிரகாஷை அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டதுபோலவே அவளுக்கு உறுதியாகி விட்டது. அதோடு கூட உஷா அவளிடம் வெளியிட்ட செய்தி— அவளும் ஒருவனைக் காதலிக்கும் விவரம்— தெரிந்ததிலிருந்து தான் செய்கிற இந்தக் காரியம் ஒன்றும் தவறானதல்ல என்கிற எண் ணமும் ஏற்பட்டிருந்தது. உஷாவிடம் அவள் பிரகாஷைப் பற்றிய எல்லா விவரங்களையும் சொல்லி யிருந்தாள். ஆனால் சமயம் வரும் வரையில் அண்ணாவிடமோ, அம்மாவிடமோ ஒன்றையும் சொல்லக் கூடாதென்று வாக்கு வாங்கிக் கொண்டிருந்தாள்.

அண்ணா சமாதிக்கருகில் பிரகாஷ் மோட் டார் சைக்கிளை நிறுத்தினான். இருவரும் இறங்கி, சமாதியைத் தாண்டி, மணலில் சிறிது தூரம் நடந்து சென்று உட்கார்ந்து கொண்டனர்.

''என்ன உமா, என்னமோ நிறையப் பேச வேண்டி யிருக்குன்னு சொன்னியே!'' என்று பேச்சை ஆரம்பித்தான் பிரகாஷ்.

''ஆமாம் பிரகாஷ். நம்மோட விஷ யத்தை எங்க வீட்டுக்கு ஒரு மாதிரியாச் சொல்லியாச்சு. சொல்ல வேண்டிய தேவை

# இரக்கமற்ற இரவுகள்



ஹேமா ஆனந்ததீர்த்தன்

வந்துடுத்து'' என்று கூறி அன்று வீட்டில் நடந்த பேச்சு வார்த்தைகளை யெல்லாம் அவனுக்குச் சொன்னாள்.

''இவ்வளவு சொன்னவ ஏன் உமா என்னைப் பத்திய முழு விவரத்தையும் சொல்லியிருக்கக் கூடாது?''

''சொல்லி ஒரு சமயம் அவங்களுக்குப் பிடிக்காமப் போயிட்டா எனக்கு வருத்தமாப் போயிடும். அவங்க இஷ்டத்துக்கு விரோதமா என்னாலே ஒண்ணும் செய்ய முடியாது. உங்களையும் விட்டுட முடியாது. அதனாலேதான்.''

''என்னை அவங்களுக்குப் பிடிக்காமப் போயிடும்னு நீ ஏன் நினைக்கிறே? உங்க வீட்டுக்காரங்க அவ்வளவு கட்டுப்பெட்டிக் காரங்க இல்லேன்னு நீயே சொல்லியிருக்கியே?''

''அது உண்மைதான் பிரகாஷ். எங்கண்ணனைப் பத்தி எனக்கு அந்த நம்பிக்கை பூர்ணமா யிருக்கு. ஜாதி வித்தியாசத்துலெ யெல்லாம் அவனுக்கு நம்பிக்கையில்லே. ஆனா எங்கம்மாவும், தாத்தாவும் ஏதாவது 'அப்ஜெக்ட்' பண்ணுவாங்களோன்னு ஒரு சந்தேகம்.''

''அப்படி இருந்ததுன்னா இப்பவே அவங்களுக்குச் சொல்லிவிடறது நல்லது இல்லையா உமா. அப்புறம் நாம இன்னும் ஜாஸ்தி நெருக்கமானப்புறம் சங்கடம் ஏற்படக் கூடாதில்லையா?''

''நீங்க என்ன சொல்றீங்க பிரகாஷ்? அப்படின்னா இப்ப நாம போதுமான அளவு ஒருத்தரோடொருத்தர் நெருக்கமா யில்லைன்னு சொல்றீங்களா? இப்ப எங்க வீட்லே சொல்லி, அவங்க ஒத்துக்காட்டி இப்பவே நாம பிரிஞ்சுடலாம்னு சொல்றீங்களா? என்னாலே உங்களைப் பிரிஞ்சு இருக்கவே முடியாது.''

''ஐ எம் சாரி, உமா. நான் அந்த அர்த்தத்துலே சொல்லல்லே.''

''எங்கப்பா இருந்திருந்தார்னா எனக்குக் கவலையே இல்லே. அவருக்கு ரொம்ப 'ப்ரொக்ரஸிவ் ஐடியாஸ்' உண்டு. ஆசாரமாகவும் இருப்பார். அதே சமயத்திலே குறுகிய மனப்பான்மை இல்லாமலும் இருப்பார். அவர் சரின்னா சொல்லிட்டார்னா அப்புறம் வீட்லே மத்தவங்க அவருக்கு எதிரா ஒண்ணும் சொல்ல மாட்டாங்க...''



உமா பேசிக் கொண்டே இருக்கும்போது பிரகாஷ் முகத்தைச் சுளித்தபடி உதட்டைப் பல்லால் கடித்துக் கொண்டான். இடது கையால் 'வயிற்றைப் பிசைந்து விட்டுக் கொண்டான்.

''என்ன பிரகாஷ்?''

''என்னமோ இசுர்னு வயிறு வலிக்கிறது.''

''ஏன்? அஜீர்ணமாகி யிருக்குமா?''

''தெரியலியே. ரொம்ப வலிக்குதே.''

''காஸ் டிரபுள் உண்டா உங்களுக்கு?''

''ஒரு டிரபுளும் கிடையாது உமா. இன்னிக்குத்தான் வயித்து வலிங்கறதே என்னன்னு எனக்குத் தெரியும்...... ஐயோ... அநியாயமா வலிக்கிறதே.''

''போயிடலாமா?''

மோட்டார் சைக்கிள் ஓட்டக் கூட முடியாது போலிருக்கே'' என்று தவித்தான் பிரகாஷ். அப்படியே சுருண்டு படுத்து விட்டான்.

உமாவுக்குப் பயமாகப் போய்விட்டது. என்ன செய்வது என்று அவளுக்கே புரியவில்லை.

''என்ன செய்யலாம் பிரகாஷ்?'' என்று அவனையே கேட்டாள்.

''ஐயோ, உயிர் போறாப்பலே இருக்கே. அம்மா, என்ன வலி வலிக்குது உமா!'' என்று புழுப் போலத் துடிக்கத் தொடங்கி விட்டான். பிரகாஷ்.

இரண்டு நிமிடங்களில் அவர்களைச் சுற்றிப் பதினைந்து இருபது பேர் கூடிவிட்டார்கள்.

''உடனே ஆஸ்பத்திரிக்குக் கூட்டிட்டுப் போவணும். அப்பெண்டிஸைடிஸா இருந்தாலும் இருக்கும்'' என்றார் ஒருவர்.

உமாவுக்குப் பீதி பற்றிக் கொண்டது. அவள் கை கால்கள் எல்லாம் நடுங்கத் தொடங்கி விட்டன. அந்தக் கடற்கரைக் காற்று வெளியிலும் அவளுக்கு வேர்க்கத் தொடங்கி விட்டது.

''ஏம்மா பார்த்துட்டு நிக்கறே. ஒரு டாக்ஸி பிடிச்சுக் கூட்டிட்டுப் போ. நேரா ஜி. எச்.சுக்குப் போ.'' என்றார் கூட்டத்தில் ஒருவர்.

''ரெண்டு மூணு டாக்ஸி நிக்குது ரோடுல. அவங்களும் போகக்குன்னு போயிட்டாங்கன்னு அப்புறம் பேஜாரு. போய் இருக்கச் சொல்லட்டா ஒரு டாக்ஸியை?'' என்று கேட்டான் ஒருவன்.

''நாங்க மோட்டார் சைக்கிள்ள வந்திருக்கோம்'' என்று பதறினாள் உமா.

''அது அப்படியே கிடக்கட்டும். நீ போம்மா. அவரைக் கூட்டிக்கிட்டு. பூட்டியிருக்குல்ல? எங்கேயும் போகாது. அப்புறம் வீட்டிலேருந்து வேற யாரையாவது வந்து எடுத்துக்கிட்டுப் போகச் சொல்லுவியாம்.''

''நீங்க வாங்க. மோட்டார் சைக்கிளை நான் கொண்டு வரேன்'' என்று ஒரு வாலிபன் முன்வந்து, பிரகாஷைக் கைத்தாங்கலாகப் பிடித்து அழைத்துக் கொண்டு சாலையை நோக்கி நடந்தான்.

டாக்ஸியில் பிரகாஷைப் படுக்க வைத்து அவனருகிலேயே உமா உட்கார்ந்துகொண்டாள். டாக்ஸி ஜெனரல் ஆஸ்பத்திரியை நோக்கிப் பறந்தது. அவர்களுக்கு உதவிக்கு வந்த அந்த வாலிபன் டாக்ஸிக்குப் பின்னாலேயே மோட்டார் சைக்கிளை ஓட்டிக் கொண்டு வந்தான்.

ஜெனரல் ஆஸ்பத்திரியை அடைந்ததும் கூட வந்த அந்த இளைஞன் பிரகாஷை 'அட்மிட்' செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தானே செய்தான். அந்த ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கும்போதே உமா தொலைபேசி மூலமாக பிரகாஷின் வீட்டுக்குச் செய்தியைச் சொல்லி விட்டாள்.

ஆஸ்பத்திரியை அடைந்து அரை மணி நேரம் கூட ஆகியிருக்காது. பிரகாஷைப் பார்த்து 'அப்பெண்டிஸைடிஸ்'தான் என்று தீர்மானித்து ஆபரேஷனுக்குத் தயார்செய்யச் சொல்லிவிட்டுச் சென்றிருந்தார் டாக்டர். அந்த ஏற்பாடுகளுக்குத் தேவையில்லாமலே பிரகாஷின் வலி போய்விட்டது. போகும் போது அவன் உயிரையும் பறித்துக்கொண்டு போய்விட்டது. கண் மூடிக் கண் திறப்பதற்குள் என்று சொல்வார்களே அந்த மாதிரி நடந்து விட்டது.

உமாவுக்கு இடி விழுந்தாற்போலிருந்தது. அவளுக்கு அழக்கூட முடியாதபடி பிரமை பிடித்தாற்போல் ஆகிவிட்டது.

அரை மணி நேரத்துக்கு முன்னால் கடற்கரையில் உட்கார்ந்து உல்லாசமாக, உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்த பிரகாஷின் வாழ்க்கை இப்படித் திடு திப்பென்று முடிந்து விட்டதென்று அவளால் நம்பக் கூட முடியவில்லை. அவன் வாழ்க்கையோடு தன் வாழ்க்கையும் முடிந்து விட்டதாகவே அவளுக்குத் தோன்றியது. 'என்னாலே உங்களைப் பிரிஞ்சு இருக்கவே முடியாது' என்று கடற் கரையில் சொன்னபோது அவள் தங்களிடையே இப்படி ஒரு பிரிவு வரும் என்று சற்றேனும் நினைத்திருப்பாளா?

ஆபரேஷன் தியேட்டருக்குக் கொண்டு செல்ல வேண்டியிருந்த பிரகாஷை இப்போது 'மார்ச்சுவரி'க்குக் கொண்டு போகவேண்டுமென்று சொன்னார்கள்.

''வேண்டாம். வீட்டுக்கே கொண்டு போயிடறோம். இப்ப வீட்லேர்ந்து வந்துடுவாங்க'' என்று சொன்னாள் உமா. கட்டிலினருகில் உட்கார்ந்து கொண்டு பிரகாஷின் சலனமற்ற உடலைப் பார்த்துக் கொண்டிருந்த உமாவுக்கு அவன் மீது விழுந்து கதறி

''எங்க மாமா ஒரே சமயத்தில் ரெண்டு வேலையைச் செய்வார்...''
''அப்படியா...!''
''ஆமாம்!... தூங்கிக்கிட்டே குறட்டையும் விடுவார்...''

- வினைத்துக்கடவு ரவி

அழவேண்டும் போலத் துயரம் பொங்கியது. ஆனால் அதற்குக் கூட இப்போது தனக்கு உரிமை இல்லையோ என்பதை நினைத்தபோது அந்தத் துயரம் இன்னும் அதிகரித்தது.

பத்து நிமிடங்களுக்குள்ளாக பிரகாஷின் அப்பாவும், அம்மாவும் அங்கே வந்து சேர்ந்தார்கள். பிரகாஷின் உயிரற்ற உடலைக் கண்டதும் அவன் தாயார் 'ஹோ' வென்று குரலெடுத்து அழுது விட்டாள். பிரகாஷின் உடலின் மீது விழுந்து புரண்டாள். அவன் தகப்பனார் தம் வாயைப் பொத்திக் கொண்டு விம்மத் தொடங்கினார். அந்த இருவரின் சோகத்தைக் கண்டதும் இதுவரை அடக்கி வைத்திருந்த உமாவின் துயரம் கரையை உடைத்துக் கொண்டு பாயும் காட்டாற்று வெள்ளம் போல் பெருகியது. கண்களிலிருந்து மளமளவென்று நீர் பெருகியது. உடல் குலுங்க, உள்ளம் வெதும்ப அழுகை வெடித்தது அவளிடமிருந்து.

அழுது கொண்டே பிரகாஷின் அப்பா உமாவிடம் "என்ன நடந்தது, எப்படித் திடீர்னு இப்படி ஆச்சு?" என்று விசாரித்தார். உமா நடந்த விஷயங்களைச் சொன்னாள். உதவி செய்த அந்த இளைஞனையும் சுட்டிக் காட்டினாள்.

அடுத்த சில நிமிடங்களில் பிரகாஷின் உடலைக் காரில் போட்டுக் கொண்டு உமாவும் பிரகாஷின் பெற்றோர்களும் எழும்பூரிலிருந்த அவர்கள் வீட்டை நோக்கிச் செல்லலாயினர். அந்த இளைஞன் இப்போதும் பிரகாஷின் மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு காருக்குப் பின்னாலேயே வந்தான்.

பிரகாஷின் வீட்டை அடைந்ததும் அவன் உடலை எடுத்து வீட்டுக்குள் கொண்டு போகும் போது, அங்கேயிருந்த அவனுடைய சகோதரிகள், சகோதரர்கள், தாத்தா, பாட்டி எல்லோரும் கதறித் தீர்த்து விட்டார்கள். யாரும் எதிர்பார்த்திருக்கவில்லை இந்தக் கண்றாவியான சாவை.

அரை மணி நேரம் அங்கே உட்கார்ந்திருந்துவிட்டு உமா புறப்பட்டாள். பஸ்ஸில் உட்கார்ந்து மயிலாப்பூருக்கு வந்துகொண்டிருக்கையில் அவள் எண்ணங்களெல்லாம் பிரகாஷைப் பற்றியதாகவே இருந்தது.

அவனோடு அவள் பழகியது சென்ற ஆறு மாதங்களாகத்தான். ஆனால் ஆறு வருடங்களாகத் தங்களிடையே பழக்கம் இருப்பது போன்ற ஒரு மன நெருக்கம் ஏற்பட்டு விட்டிருந்தது அவளுக்கு பிரகாஷிடம். முதல் முதலில் அவனைச் சந்தித்தது, முதல் சந்திப்பிலேயே தன் மனத்தை அவனிடம் பறி கொடுத்தது; பிறகு அடிக்கடி தாங்கள் சந்தித்துக் கொண்ட சந்தர்ப்பங்கள், பேசிய பேச்சுக்கள், பிரகாஷின் பண்பு நிறைந்த நடத்தை, இவைகளையெல்லாம் நினைத்துக் கொண்டாள். இவைகளெல்லாம் இனி வெறும் நினைவுகளாகவே தான் இருக்க வேண்டும் என்பதை எண்ணிப் பார்க்கிறபோது அவள் நெஞ்சைப் பிசைவது போல இருந்தது. இவ்வளவு நாட்களாகத் தன் காதலைப் பற்றிச் சொல்லாமல் ரகசியமாக வைத்திருந்து இப்போதுதான் வீட்டில் லேசாக அதைப் பற்றிக் கோடி காட்டியிருக்கும் இந்த நிலையில் இப்படி ஏற்



தமாஷ் படம் இப்படித்தான் இருக்கும்!
தகவல்: சலன்

பட்டு விட்டதை எண்ணி ஆறாத் துயரம் அடைந்தாள்.

வீட்டை அடைந்த உமா நேராகத் தன் அறைக்குப் போய்க் கட்டிலில் விழுந்தாள். குப்புறப் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

மாலையிலிருந்து அவள் வீட்டுக்கு வராமலிருந்தபோதே, ஜானகி, உஷா, பலராமன், ரவி எல்லோருமே என்ன காரணமோ ஏதோ என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். ஏதாவது ஸ்பெஷல் வகுப்பு இருந்திருக்குமா, தோழிகளுடன் சினிமாவுக்குப் போய் விட்டிருப்பாளா, அல்லது எங்காவது விபத்தில் மாட்டிக் கொண்டிருப்பாளா என்றெல்லாம் நினைத்து நினைத்து மண்டையைப் போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தார்கள்.

அப்படி இருக்கும்போது வீட்டுக்கு வந்தவள் யாரிடமும் ஒன்றும் சொல்லாமல், யார் கேள்விக்கும் பதில் சொல்லாமல் நேரே கட்டிலில் போய்க் குப்புறப் படுத்துக் கொண்டு நெஞ்சு வெடித்துவிடும்போல் அழுகிறாள் என்றால் எல்லோருக்கும் பயமாகப் போய்விட்டது. (தொடரும்)

---

ராஜ்யசபை அங்கத்தினரான நர்கிஸ் கூறுகிறார்: "கலையுலகில் நின்று நிலைத்துவிட்ட திருமணங்களைக் கூட ஆட்டம் காண வைக்கிறது இன்றைய 'கிசுகிசு'. பட உலகை விட்டுப் பல வருடங்கள் முன்பே விலகிவிட்ட என்னைக்கூட துரத்துகிறது இந்த வேதனை தரும் 'கிசுகிசு!' என்னை முற்றிலும் புரிந்து கொண்ட கணவன் இருப்பதால் தப்பித்தேன். ஆனாலும் எங்களுக்குள்ளும் எப்போதாவது சச்சரவுக்குக் காரணமாகிறது 'கிசுகிசு'.

- என். மதுரம்






'ஈச்வரனே நேரே பூலோகத்துக்கு வந்து உபதேசித்தால் என்ன? மத்தியில் குரு ஒருவர் எதற்காக?' என்று கேட்கலாம்.

சாதாரணமாக நடைமுறை உலகில் என்ன பார்க்கிறோம்? ஒருவன் தன்னை மற்றவர்கள் மரியாதை செய்ய வேண்டுமென்று நினைத்தால், அவனே போய், 'எனக்கு மரியாதை பண்ணுங்கள்' என்று சொன்னால் நடக்காது; இருக்கிற மரியாதையும் கூடப் போகத்தான் செய்யும். அதனால், தன் யோக்யதையை அறிந்த இன்னொருவனைக் கொண்டே மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லப் பண்ணுவது வழக்கம்.

நம்முடைய ஸத்கதிக்கு முக்கியமாகச் செய்ய வேண்டியது ஈச்வர பக்தியை உண்டாக்குவது தான்; ஈச்வர மஹிமைகளைச் சொல்லி அவனிடம் விச்வாஸ, மரியாதைகளை ஏற்படுத்துவதுதான். இதை ஈச்வரனே எப்படிப் பண்ணிக்கொள்ள முடியும்? ஆகவே ஈச்வரனிடத்தில் நமக்கு பக்தி ஏற்பட வேண்டுமானால், அவனுடைய ஸ்வரூப — ஸ்வபாவங்களை அறிந்த மற்றொருவனான குருவிடமிருந்து இவற்றைக் கேட்டறிந்தால்தான் முடியும்.

ஈச்வரனே மானுஷ விக்ரஹம் எடுத்தோ (மானுடனாக வந்தோ) வேறு எவ்விதத்திலோ நம் முன் வந்து நின்றுகொண்டு, ''நான்தான் ஈச்வரன். நான் சொல்கிறபடி எல்லாரும் கேளுங்கள்'' என்றால் — அவர் சொல்கிறபடி நாம் கேட்கிறது அப்புறம் இருக்கட்டும்; முதலில் இப்படிச் சொல்கிற அவரை ஈச்வரன் என்று ஒப்புக்கொள்ளவே நாம் தயாராயிருப்போமா? முன்னொரு காலத்தில் பகவானுனவர் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்த ஸமயத்தில் இப்படியும் கௌரவ ஸபையில் ஸாக்ஷாத்தாகச் சொல்லிப் பார்க்கவில்லையா? பகவானே சொல்லியும் துர்யோதனன் நம்பாமல்தானே இருந்தான்? அவர் விச்வரூபம் எடுத்துக் காட்டினதும் கூட ஏதோ இந்திரஜால வித்தை என்றுதானே தோன்றிற்று?

சார்வாகர்கள் என்று ஆதிகாலத்தில் ஈச்வரனை ஒப்புக்கொள்ளாத நாஸ்திகர்கள் இருந்தார்கள். 'கண்ணுக்குத் தெரியாததால் ஈச்வரன் என்றே ஒன்று கிடையாது' என்பது இவர்களுடைய வாதம். ''இவர்கள் இப்படிச் சொல்கிறார்களே, இவர்களுக்கு நல்புத்தி வருவதற்காக நீ ப்ரத்யக்ஷமாகத்தான் வாயேன்'' என்று ரிஷிகள் பரமாத்மாவைப் பிரார்த்தித்தார்கள். அவர்களுடைய பிரார்த்தனைக்கு இணங்கி பகவானும் ரூபம் தரித்துச் சார்வாகர்களின் முன்னால் தோன்றினார். உடனே அவர்கள், ''இதுவரையில் 'ப்ரத்யக்ஷத்தில் புலப்படாததால் ஈச்வரன் இல்லை' (நாஸ்தி ஈச்வர: ப்ரத்யக்ஷ-அவிஷயத்வாத்) என்று சொல்லி வந்தோம். இப்போது 'ப்ரத்யக்ஷமாகப் புலப்படுவதாலேயே இவன் ஈச்வரன் அல்ல' (ந அயம் ஈச்வர: ப்ரத்யக்ஷ விஷயத்வாத்) என்று சொல்கிறோம்'' என்றார்களாம்! இப்படி ஸமயத்துக்குத் தக்கபடியும், மனஸுக்குத் தோன்றியபடியும் ஜனங்களும் ஆக்ஷேபிக்குமாதலால் ஈச்வரன் நேரில் வந்துதான் என்ன ப்ரயோஜனம்? அதனாலே நம்மைப் போலவே மனுஷ்யனாகப் பிறந்த ஒருவன் அவனை அறிந்து அநுபவித்து எடுத்துச் சொல்லித்தான், அவனிடம் பக்தியை உண்டாக்க முடியும்.

'ஏற்கனவேதான் சாஸ்திரங்கள் நிறைய இருக்கிறதே. அதை நாம் பார்த்து, அதன் பிரகாரம் செய்தால் போதாதா? குரு என்று ஒருத்தன் எதற்கு?' என்று மற்றொரு கேள்வி கேட்கலாம். ஆனால், இருக்கிற சாஸ்திரங்களோ அனந்தம். அதனால் சாஸ்திரப் பிரயாஸம் செய்யவே நம் ஆயுசு போதாது. இத்தனை சாஸ்திரங்களிலிருந்து குறிப்பாக அவரவருக்கும் இருக்கிற ஏராளமான தோஷங்களைப் போக்கடித்துக் கொள்ள என்னென்னவற்றை எடுத்துக் கொண்டு அநுஷ்டிக்க வேண்டும் என்று அவரவராலேயே தெரிந்து கொள்ள முடியாது. ஆகையால் நல்ல நடத்தையிலும், ஞானத்திலும் நம்முடைய பக்குவ-அபக்குவத்தை அறிந்து, 'இவன் இன்ன படியில் இருக்கிறான்; இன்ன காரியம், அநுஷ்டானம், ஸாதனை செய்தால் மேல் படிக்குப் போவான்' என்று அறிந்து எடுத்துச் சொல்கிற குரு அவசியமாகிறார்.

பலவிதமான ஜ்வரங்களின் தன்மைகள் தெரிந்தவனாய் இன்ன ஜ்வரத்துக்கு இன்ன மருந்து, அதை இன்ன விதமாய் உபயோகப் படுத்த வேண்டுமென்று தெரிந்தவனுமுள்ள வைத்தியனின் ஸ்தானத்திலிருக்கிறவர் குருவே.

(அமைப்பு: ரா. கணபதி)

# புதிய தலைமுறை



**திரு இரா. ஸாயிராம்**
(பொதுப்பணி)

காஞ்சிபுரம் புதுப் பெரியவர்களின் அருளாசியுடன் தொடங்கப்பட்ட ஹிந்து சமய இளைஞர் மன்றத்துக்குச் சென்னையிலேயே 23 கிளைகளும் எண்ணூறுக்கும் மேற்பட்ட உறுப்பினர்களும் உண்டு.

இராயப்பேட்டைக் கிளையின் செயலாளர் திரு ஸாயிராம் இருபத்து எட்டு வயது இளைஞர். பி.காம் பட்டதாரி.

ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்ட் பதினைந்தாம் தேதியன்று ஏதாவது ஒரு புண்ணிய ஸ்தலத்துக்குப் பாத யாத்திரை செல்வதும், வழியில் பக்தி நெறியைப் பரப்புவதும் குறிப்பிடத் தக்க பணி.

இருபத்தைந்து பேருக்கு மேற்படாமல் ஜாதி வேறுபாடின்றி அனைவரும் கலந்து கொள்ளும் பாத யாத்திரைக்குக் கட்டுப்பாடு உண்டு. வெற்றிலை பாக்குக் கூடப் போடக் கூடாது. மினி சபரி மலை யாத்திரை.

பத்தாம் வகுப்பு வரை படிக்கும் ஏழைப் பிள்ளைகளுக்கு இலவசப் பாடபோதனையும் செய்கிருர்கள்.

ஸ்ரீராமநவமி, தீபாவளி நாட்களில் சென்னையில் உள்ள பல மருத்துவ மனைகளுக்கும் இந்தச் சங்க உறுப்பினர்கள் சென்று நோயாளிகளுக்குப் பிரசாதங்களும் இனிப்பும் வழங்குகிருர்கள்.

வரதட்சிணை வாங்குவது கூடாது என்ற விரதம் உள்ள இந்த மன்ற உறுப்பினர்கள், ஒருவருக்கொருவர் சந்திக்கும்போதும், பிரியும் போதும், தொலைபேசியில் பேச்சைத் தொடங்கும்போதும் சொல்வது: ''ராம் ராம்''!

இந்த இளைஞர் மன்றம் 3000 சமய இலக்கிய நூல்களைச் சேர்த்துள்ளது.



**திரு. கே. ரவி**
(வழக்கறிஞர்)

''மாணவரிஸம்'' என்னும் மாத இதழை மூன்றரை ஆண்டு காலம் நடத்தியவர் இந்த வழக்கறிஞர். 4000 பிரதிகள் வரை விற்பனையான அந்த இதழ் நிலையான வாசகர்கள் இல்லாமையால் நின்று போனதாம்.

''இசையையும் கவிதையையும் வழிபாட்டுப் பொருளாகவே கருதுகிறேன்'' என்று கூறும் திரு ரவி, நல்ல கவிஞர். பாடக்கூடிய குரல் வளமில்லை என்பது இவருக்குள்ள ஒரே குறை.

''நூறு ரூபாய்க்கு மேல் கொடுக்கப்படும் எல்லாக் கடன்களும் முறைப்படி பதிவு செய்யப்பட வேண்டும். அப்படிப் பதிவு செய்யப்பட்ட கடன் தாவாக்கள் மட்டுமே வழக்குப்போட அருகதை பெறும் என்று சட்டம் செய்ய வேண்டும்'' என்பது இவருடைய கருத்து. இப்படிச் செய்வதன் மூலம் ஒன்றுக்கு இரண்டாய்க் கையெழுத்துப் பெறுவது, கருப்புப் பணப் புழக்கம், சிவில் வழக்குகளில் காலதாமதம், அமித வட்டி போன்ற பிரச்னைகளைத் தீர்க்க முடியும் என்று நம்புகிருர். தவிர, வேலையின்றி அவதியுறும் ஏராளமான வழக்கறிஞர்களைக் கமிஷன் அடிப்படையில் கடன் பதிவாளர்கள் என்று நியமிப்பதன் மூலம் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் வழி பிறக்கும் என்பது இவருடைய கணிப்பு.

திரைப்படத் தயாரிப்பாளரான திரு ஆர். கல்யாணராமனின் மகனான இவரிடம் வருவது பெரும்பாலும் அந்தத் துறை தொடர்பான சிவில் வழக்குகள்தான். ''ஒரு பத்தாண்டு காலம் இந்தத் தொழிலில் இருந்துவிட்டு ஓய்வு பெற்றுவிடுவேன். அமைதியாகக் கவிதை எழுதுவேன், இலக்கியம் படிப்பேன்'' என்கிருர் இவர்.



**திரு. உம்மிடி ஸ்ரீதர்**
(பார்ட்னர், உம்மிடியார்ஸ்)

உம்மிடி பாண்டுரங்கையாவின் கடைக் குட்டியான ஸ்ரீதர், சமூகப் பணியில் மிகுந்த ஈடுபாடு உடையவர். சில ஆண்டுகளுக்கு முன் தம்முடைய நண்பர்கள் சிலரின் உதவியுடன் பார்வை இழந்த இருபது மாணவர்களுக்கு ஒய். எம். ஸி. ஏ.யில் நீச்சல் கற்றுத் தந்தார்.

அம்பத்தூர் அரிமா சங்கத்தில் உறுப்பினராக இருந்தபோது விடுமுறை நாட்களில் தம்முடைய சொந்த சினிமா புரொஜக்டருடன் சென்று, பாலமந்திர் போன்ற அமைப்புகளில் பயிலும் ஏழைக் குழந்தைகளை உற்சாகப்படுத்துவதற்காகத் திரைப்படங்கள் போட்டுக் காட்டியதுண்டு. வீட்டில் யாருக்காவது பிறந்த நாள் என்றால் அதைக் கொண்டாடுவது ஏழைச் சிறுவர்களுக்கு உணவு வழங்குவதன் மூலம்தான்.

கர்நாடக இசையில் ரொம்ப ஆசை. மனைவி யதுகிரியும் வீணை பயின்றவர். கிரிக்கெட், புகைப்படக் கலை, 'இண்டீரியர் டெகரேஷன்' என்னும் அலங்கரிக்கும் கலை இவற்றில் ஆர்வமுடைய ஸ்ரீதர், இவை பற்றி ஏராளமான நூல்களைப் படிக்கிருர். புகை பிடிக்கும் பழக்கம் கூடத் தம்மிடம் கிடையாது என்று பெருமையுடன் சொல்கிருர்.

''தங்கம் விலையேற்றத்தினால் சில ஆண்டுகளாய் ஆபரணத் தொழில் பாதிக்கப்பட்டுள்ளது. உம்மிடியாரிலேயே வெள்ளியினால் ஆன ஆபரணங்களையும் இப்போது மக்கள் வாங்குகிருர்கள். தங்கத்தில் செய்யக் கூடிய எல்லா நகைகளையும் இப்போது வெள்ளியிலும் செய்கிறோம்'' என்கிருர் இவர்.

**— சுப்ரபாலன்**



# திரைக் குவிஸ்



எஸ். பி. முத்துராமன் மகள் திருமணம். ஒவ்வொரு கலைஞராக விஜயம் செய்ய வாசலில் ஒளிப்பதிவாளர் பாபு அனைவரையும் வரவேற்று உள்ளே அனுப்பிவைத்தார். காரில் வந்து இறங்கிய ஓர் இளைஞரை பாபுவினால் கூட ஒரு கணம் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. எஸ். பி. முத்துராமன் இளைஞர் கையைப் பிடித்து அழைத்துப் போய் ''நம்பினால் நம்புங்கள் இவர்தான் ரஜனி'' என்று மணமக்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அந்த இளைஞர் ஒரு கையால் வாயை மூடிக் கொண்டு சிரித்தார். காரணம் என்ன?



(2) பானை பிடித்தவள் பாக்கியசாலிதான். நமக்குத் தெரியும். யார் இந்தச் சிறுமி?

(3) ரொம்ப நாளைக்கு முன்னால் (63ல்) எடுக்கப்பட்ட படம். இசைக் கலைஞர்கள் நால்வர் இருக்கிறார்கள். கண்டுபிடிக்க முடிகிறதா பாருங்கள்.



(4) சமீபத்தில் எடுத்த படங்கள் இவை: முன்னால் இருக்கும் சரிதா பின்னால் உள்ள யாரை மறைத்துக் கொண்டிருக்கிறார்? பின்னால் இருப்பது சுதாகர், புரிகிறது: முன்னால் அவுட் ஆஃப் ஃபோகஸில் இருப்பது யார்?



(5) நாடகக் கலைஞர்கள் புகைப்படத்தில் மையமாக இருப்பது டி. கே. பகவதி என்று கூறிவிடுவீர்கள். வேறு இரு பிரபல நடிகர்களும் இருக்கிறார்களே தெரிகிறதா?

(6) கமலதா அழகுப் போட்டியில் பரிசு வாங்கியவர் 'தம்ஸ் அப்' ராணியாக இங்கு காட்சி தருபவர் குழந்தையாக இருக்கும் போது எப்படி இருந்திருப்பார்?



விடை: அடுத்த பக்கம்



**விடைகள்**

(1) அந்த இளைஞர் ரஜனிகாந்த்தான். பாலசந்தரின் தில்லு முல்லு படத்தில் நடிப்பதற்காக மீசையை எடுத்திருந்தார். அது தான் தடுமாற்றத்துக்கும் பிறகு சிரிப்புக்கும் காரணமாயிற்று.

(2) ரத்தி.

(3) விஸ்வநாதன்; ராமமூர்த்தி; பி.பி. ஸ்ரீனிவாஸ்; ஏ. எல். ராகவன்.

(4) விஜயன்; ராதிகா.

(5) பக்கோடா காதர்; கமலஹாசன்.

◀ (6) குழந்தை கமலதா இப்படித்தான் காட்சியளித்தார்!

தொகுப்பு: **சவன்**




● புஷ்பா தங்கதுரையின் சமீபத்திய படைப்புகளில் நான் மிகவும் ரசித்துப் படித்தது 'கடலுக்குள் ஜூலி'. ஒரு சரித்திரக் கதைக்கு எத்தகைய ஆராய்ச்சியும் முயற்சியும் தேவையோ, அத்தகைய ஆர்வமுடன் மிகவும் பிரயத்தனப்பட்டுப் படைத்திருக்கிறார். கடலுக்குள் ஜூலி எவ்வாறு மூழ்கியது என்பதை ஒருபுறமும், அதன் மறைவிடத்தை எவ்வாறு கண்டுபிடிக்கிறார்கள் என்பதை மறுபுறமும் சொல்லிக் கொண்டு வந்த பாணி மிகவும் ரசிக்கத் தக்கது.

சென்னை-61 எம். சிவசுப்பிரமணியம்

● நாங்களே கடலுக்குள் சென்று ஜூலியைத் தேடின நிறைவு ஏற்பட்டது.

தூத்துக்குடி ஜான்ஸிராணி

● புஷ்பா தங்கதுரை, எதிர்ப்புக் கடிதத்துடன் ஆரம்பித்தாலும் 'கடலுக்குள் ஜூலி'யை ஆராய்ச்சியுடன் கூடிய சுவையான நாவலாகப் படைத்துவிட்டார். இது நாங்கள் எதிர்பாராதது. செம்பியனின் புகழுரை மிகையல்ல.

பெங்களூர்-5 அ. குமார்

● 24 வாரங்களாக வெளிவந்த புஷ்பா தங்கதுரையின் 'கடலுக்குள் ஜூலி' தொடர்கதை அருமையாக அமைந்தது. கதையில் ஒன்றுமே புரியவில்லையே! 'ஜெ'யின் ஓவியம்தான் கதையின் உயிர்நாடி.

சென்னை-33 கே. பாபு

● ஆராய்ச்சி பாணியில் எழுதப்பட்ட கதைதான் என்றாலும் போரடிக்காமல் எடுத்துச் சென்றிருக்கிறார் புஷ்பா தங்கதுரை. வளமான எழுத்தோட்டம், செம்மையான கதைப் பாங்கு.

சென்னை பூவை விமலன்

● புஷ்பா தங்கதுரையின் கடலுக்குள் ஜூலி மிகவும் விறுவிறுப்பாக இருந்தது. ஜெயின் படங்களும் எக்ஸலண்ட்!

ஸ்ரீரங்கம் எஸ். கிருஷ்ணன்

● கடலுக்குள் ஜூலி — ஒரு கதைமட்டுமல்ல, ஆராய்ச்சிப் பெட்டகம். ஆசிரியரின் திறமை போற்றத் தக்கது.

தூத்துக்குடி பா. காமராசன்

● இருபத்திநான்கு வாரங்களாகக் குழப்பமும் கோபமும் கல்கி வாசகர்களுக்கு உருவாகி இருந்ததைக் கல்கி நிர்வாகம் முடித்துக்கொண்டதற்கு அனைவர் சார்பிலும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். விடைபெறும் புஷ்பா தங்கதுரைக்கும் என் நன்றி உரித்தாகிறது.

திருப்பூர் கே. சோமசுந்தரம்

● கப்பலைப் பற்றியும், கடலைப் பற்றியும் விளக்கி நாங்கள் அறியாத பல அதிசயிக்கத் தக்க உண்மைகளைப் பிட்டுப் பிட்டு வைத்த புஷ்பா தங்கதுரைக்கு எங்கள் நன்றி கலந்த வணக்கங்கள்.

சேலம் கிருஷ்ணராஜ் குடும்பத்தினர்

● என்று அமெரிக்கப் பயணக் கதை தொடங்கி பிறகு ஜூலியை எடுப்பார்கள் என்று ஆவலோடு காத்திருக்கிறோம். விரைவில் இரண்டாம் பாகம் தொடங்கட்டும்.

திருப்பூர் ராமச்சந்திரன், நடராஜன், தமிழ்ச் செல்வி

# சட்டமன்றத்தில் புதுமுகங்கள்



**கோமதி சீனிவாசன்**

(வலங்கைமான் - தஞ்சாவூர்)
அ.இ.அ.தி.மு.க.

போலீஸ் கான்ஸ்டபிளின் மகள். பி.ஏ. பட்டதாரி. ஆசிரியர் பட்டப் படிப்பை முடித்தவர். இவரது கணவர் சீனிவாசன் தஞ்சையில் சிறந்த வழக்கறிஞர். அவருக்கு அடுத்ததாக இவர் காதலிப்பது கர்நாடக இசையை. நன்றாக வீணை வாசிப்பார். தமிழக அமைச்சரவையில் சமூக நலத்துறை அமைச்சராகப் பொறுப் பேற்றுள்ளார்.

**என். சிவஞானம்**

(திருவோணம் - தஞ்சாவூர்)
இ. கா.

விவசாய குடும்பத்தைச் சேர்ந்தவர். பஞ்சாயத்துத் தலைவரில் தொடங்கி எம்.எல்.ஏ. வரை முன்னேறியவர். இருபது ஆண்டுகளாக அரசியல் அனுபவம் உள்ளவர். தமது தொகுதியில் வறுமைக் கோட்டுக்கும் மிக மிகக் கீழே உள்ள முத்து



ராஜா சாதியினர், ஹரிஜனங்கள் போன்றோருக்கு வசதிகள் கிடைக்க உழைக்கப் போவதாகக் கூறுகிறார்.

**எம். விஜயசாரதி**

(அரக்கோணம் — வ.ஆ.)
அ.இ.அ.தி.மு.க.

அனைத்து உறுப்பினர்களிலும் 'பேபி'யாகக் கருதப்படுகிறவர். இருபத்தாறே வயது. பி.ஏ. பட்டதாரி. (ஆங்கில இலக்கியம்) கிரிக்கெட் என்றால் தனி உற்சாகம். பளு தூக்குவதில் வல்லவர். இளைய சகோதரி இறந்து விட்ட துயரத்தோடும் தேர்தல் பணியில் முழு மூச்சாக ஈடுபட்டு வெற்றி பெற்றார். இன்று



தமிழக அமைச்சரவையில் அரிசன நலத்துறை அமைச்சர்.

**முகமது இஸ்மாயில்**

(பத்மநாதபுரம் - குமரி) — ஜனதா

குமரி மாவட்டம் தக்கலையில் சிறந்த வழக்கறிஞரான இவர், எதிர்பாராத விதமாக அரசியலில் நுழைந்து 1956ல் குளச்சலில் நகர சபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கர்நாடக இசை, மேல் நாட்டு மெல்லிசை இரண்டிலும் ஈடுபாடு உள்ளவர். ரொம்பவும் பிடித்தது வரலாறு மற்றும் மத சம்பந்தப்பட்ட புத்தகங்கள்.



''என் தொகுதியிலுள்ள மாம்பழத் துறையாறு அணைத் திட்டம் வெற்றி பெற உழைப்பேன்'' என்கிறார்.

**டி. யசோதா**

(ஸ்ரீபெரும்புதூர்) - இ. கா.

''1967 வரை சென்னை மாநகராட்சியில் தற்காலிக குமாஸ்தாவாகப் பணிபுரிந்தேன். அரசியல் தொல்லையில் வேலை இழந்து முழு நேர அரசியல் வாதியானேன்! நானே பேச்சாளர்களை வரவழைப்பேன். மேடை போட்டுக் கொடி கட்டுவதோடு நிற்காமல், இரவு நேரங்களில் துணைக்கு நண்பர்களையும் அழைத்துக் கொண்டு போஸ்டர் ஒட்டுவேன்.

''என் தொகுதி மக்களின் முக்கிய பிரச்னை குடிநீர், தெரு விளக்கு, போக்குவரத்துதான். இவற்றைத் தீர்க்கப் பாடுபடுவேன்'' என்கிறார் யசோதா.

பேட்டி: ''சித்தி''.



---

என்னைப் பொறுத்தமட்டில் சோஷலிசம் என்பது அர்த்த முடையதாவது எப்போதெனில் அது ஜனநாயகக் கோட்பாடுகளுக்குள் அடங்கியிருக்கும் போது மட்டுமே!
- பேயார்ட் ரஸ்டின்

# எங்கே ... ரங்கநாதா

**கடைசி பக்கம்**

## கண்ணதாசன்

கடவுள் இருக்கிறாரா இல்லையா? இருக்கிறார் என்றால், எங்கிருக்கிறார்?

ஹிரண்யன் காலத்திலிருந்து இப்படி ஒரு கேள்வி. நாட்டுக்கும் அலுத்து விட்டது; நமக்கும் அலுத்து விட்டது!

அவர் இருக்கட்டும்; இல்லாமல் போய்த் தொலையட்டும்; யாருக்குக் கவலை!

ஆனால் மரணத்தை நினைக்கும் போதெல்லாம் மகேஸ்வரன் ஞாபகம் வந்து தொலைக்கிறதே!

வாழ்க்கையின் சுக துக்கங்களில் கூடக் கடவுளை மறந்து விடலாம். ஆனால் மரணம் மறக்கக் கூடியதல்லவே?

மரணம் என்பது என்ன?

அதுவரை ஓடிக் கொண்டிருந்த காற்று ஒரு குறிப்பிட்ட தேதியில் நின்று விடுகிறது.

அது ஏன் நிற்க வேண்டும்? பல நூற்றாண்டுகளுக்கு அது ஏன் ஓடிக் கொண்டிருக்கக் கூடாது?

இருபதிலோ, முப்பதிலோ, அறுபதிலோ எழுபதிலோ, புகழ் பெற்ற விஞ்ஞானிகளையும், மருத்துவர்களையும் கூட அது ஏமாற்றி விடுகிறது.

சந்திர மண்டலத்தைக் கண்டு பிடித்து விட்ட விஞ்ஞானிகளால்கூட உயிரைக் காப்பாற்றும் மருந்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

'ஆவாரை பூத்திருக்க
சாவாரைக் கண்டதுண்டோ!'

என்பது ஒரு சித்தர் பாடல்.

ஆவாரை உயிரைக் காப்பாற்றுமாம்!

எவ்வளவு காலம் வரை?

உயிர் பிரிவது என்பது தவிர்க்க முடியாதது ஏன் அப்படி?

காரணம் யாருக்கும் புரியவில்லை.

நாத்திகன் தோற்ற இடம் இதுதான்.

''அப்பா இல்லாமல் பிள்ளை பிறக்குமா'' என்று நாத்திகன் கேட்பான். ஆனால் ஆண்டவன் இல்லாமல் மரணம் நிகழ்வதாக அவன் கூடச் சொல்ல முடியாது.

'கடவுளாவது வெங்காயமாவது' என்று கேட்டவர்களெல்லாம், இப்போது கடவுளிடம்தான் போயிருக்கிறார்கள்.

மனிதன் அறு நூறு வருடங்களுக்குத் திட்டமிடுகிறான்; அறுபது வயதிலேயே போய்விடுகிறான்.

மரணத்தின் தேதி மட்டும் ரகசியமாக வைக்கப் பட்டிருக்கிறது. அந்த ரகசியத்தைக் கண்டறியத்தான் கடோபநிஷத் நசிகேதன் புறப்படுகிறான்.

நாங்கள் ஒன்பது பேர் சகோதர சகோதரிகளாகப் பிறந்தோம். அதற்குள் ஐந்து பேர் இறந்து விட்டார்கள். எல்லா மரணமும் அறுபதுக்குள்ளேயே.

ஆனால் என் வக்கீலின் தந்தைக்கு நூறு வயது!

யாருக்கு எவ்வளவு அளந்து வைக்கப்பட்டிருக்கிறதென்பது யாருக்குத் தெரியும்?

பிள்ளையாரை உடைக்கிறீர்களா? நானும் வருகிறேன். இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லி விட்டு உடையுங்கள்.

கடவுளை நம்பிய ரமணருக்கும், நம்பாத அண்ணாவுக்கும் ஒரே நோய்தான்! காரணம் பூர்வஜென்மம் என்று இந்து சொல்கிறான்.

சாஸ்திரங்களை நம்புங்கள், நம்பாமல் போய்த் தொலையுங்கள்; யாருக்குக் கவலை?

ஆனால் அவற்றில் காணப்படுவது போலவே உலகத்தில் எல்லாம் நடக்கின்றனவே, எப்படி?

வருஷம் ஆக, ஆக, வயதாகிறது. உடம்பிலும், தலையிலும் மாற்றங்கள் நிகழ்கின்றன. பலம், பலவீனமாகிறது; இளமை போய் முதுமை வருகிறது.

இந்த மாற்றம் எப்படி நிகழ்கிறது? மலைக்கும், நதிக்கும் கடலுக்கும் இந்த மாற்றமில்லையே? மனிதன் ஏன் மாறுகிறான்?

இந்தக் குழப்பத்திலிருந்து தப்பத்தான் நாத்திகன், 'எல்லாம் தானாக இயங்குகின்றன' என்கிறான்.

முன்பு ஒருமுறை நான் இப்படி எழுதியிருந்தேன்.

''நாத்திகன் தானாகப் பிறக்கிறான்; தானாக வளருகிறான்; தானாகச் சாப்பிடுகிறான்; தானாக அனுபவிக்கிறான்; தானாக இறந்து போகிறான். சுடுகாட்டுக்கு அவன் தானாக நடந்து போக முடியாதாகையால், நான்கு பேர் தூக்கிச் செல்லுகிறார்கள்.''

என்னை மிஞ்சியவன் ஒருவன், அவனே இந்த இயந்திரத்திற்கு எஞ்சினீயர், இந்த இயந்திரத்தின் பல்வேறு பாகங்களிலும் கோளாறுகளை நிகழ்த்தி, மனிதர்களில் கெட்டிக்காரர்கள் என்று சொல்லிக் கொள்ளும் டாக்டர்களை அவன் சோதிக்கிறான்; கடைசியில் ஒருநாள் அழைத்துக்கொண்டு விடுகிறான்.

நான் ஆஸ்பத்திரி நோயாளிகளில் அவனைச் சந்திக்கிறேன்; பதவி நாற்காலிகளில் அவனைப் பார்க்கிறேன்; மேடு பள்ளங்களில் அவனது நர்த்தனத்தைக் கவனிக்கிறேன்; கடைசியாக மரணத்தில் அவனை சர்வ நிச்சயமாகக் கண்டு கொள்கிறேன்.

என்னுடைய கணிப்பில் கடவுள் தனக்குத் தானே எழுப்பிக் கொண்ட கோவிலுக்குப் பெயரே, மரணம்!



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

